# GRACE




**Rs. 4.15**
(inclusive of all taxes)
Net weight: 100 gms

காலைக் காற்றின் புதுமை.
பனித்துளிகளின் இளமை.

இயற்கையின் இனிமையும்
[illegible] புத்துணர்ச்சியும் நிறைந்த

# கிரேஸ்
குளியல் சோப்

MSIL Marketed by
Mysore Sales International Limited, Bangalore 560 052

# மண வாழ்வின் மன அமைதி மந்திரம்

இல்லற வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்கள், மனக் கவலைகள், அபிப்பிராய பேதங்கள் — அதனால் விளையும் சச்சரவுகள் ஆகியவை நீங்கி, மன அமைதியுடன் வாழ்க்கை நடத்துவதற்கு எளிமையான வழி இது:

## ஸ்ரீ ராம ஜெய ராம ஜெய ஜெய ராம

— இந்த நாமத்தைக் காலையில் எழுந்ததும் முதல் காரியமாகச் சொல்ல வேண்டும். விழிப்பு உண்டாகும் போதே பரம் பொருளின் நினைவு வரும்படி வழக்கம் ஏற்படும்.

அதே போல் இரவு உறங்குவதற்கு முன்பு இந்த நாமத்தைச் சொல்லிக் கண் மூடுவது அமைதியான மன நிலையை ஏற்படுத்தி நிச்சலனமான தூக்கத்தைக் கொடுக்கும்.

சமர்த்த ராமதாஸர் என்ற மகாராஷ்டிர தேசத்து மகான், சிவாஜி மகாராஜாவுக்கு உபதேசம் செய்த நாமம் இது. முகலாயரின் ஆதிக்கத்திலிருந்து தம் நாட்டையும் தம்மையும் மீட்க வேண்டுமே என்ற கவலையில் சிவாஜி இருந்தபோது, இதை உபதேசம் செய்தார். சிவாஜி எவ்வளவு வீரத்துடன் போராடினார் என்பது நமக்குத் தெரியும். அதே போன்ற மனோ பலத்தை நாமும் இந்த நாமத்தைச் சொல்வதன் மூலம் பெறலாம்.

பதின்மூன்று அக்ஷரங்கள் உடையது இந்த நாமம். அஷ்டாக்ஷரமும், பஞ்சாக்ஷரமும் இணைந்து (8 + 5 = 13) தரக்கூடிய நற்பயன்களைத் தரும்.

ஆஞ்சநேய ஸ்வாமி, ஸ்ரீ ராமபிரானைப் பின்தொடர்ந்து மேலுலகம் செல்லாமல், உலக நன்மைக்காகப் பூவுலகிலேயே கந்தமாதன பர்வதத்தில் தங்கி 'ஸ்ரீ ராம ஜெய ராம ஜெய ஜெய ராம' என்று ஜபித்து வருவதாகப் புராண வரலாறு சொல்கிறது.

இந்த நாமத்தைச் சொல்வதற்கு நியம நிஷ்டைகளோ, ஆசார அனுஷ்டானங்களோ தேவையில்லை. எந்தச் சந்தர்ப்பத்திலும், யார் வேண்டுமானாலும் சொல்லலாம். உண்மையான பக்தியுடன், ஈடுபாட்டுடன் இதைச் சொல்லிப் பரம் பொருளை எண்ணியவர்கள் பலர், மன அமைதியை, நற்பயனை அடைந்திருக்கிறார்கள்.

— டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள்

MUSLIM GIRL 22/160, passed Plus Two, very fair, beautiful seeks Urdu speaking educated Muslim bride groom, Private or Government employee. Reply Box No. 5621, C/o THE HINDU, Madras-600002.

SUITABLE WELL placed alliance for Protes-

WANTED MUDALIAR boy, well qualified, preferably from USA for fair, charming girl, 24/153, currently doing final M.Com., A.I.R. Artist. Reply Box No. BA-8303, C/o THE HINDU, Bangalore-560001.

ALLIANCE INVITED from suitable Madhwa



settled own house, seeks alliance from well employed Nair/Menon boys for daughter, 29 years. Convent

# மணமகன் தேவை விளம்பரம் மனப்பொருத்தத்துக்கு உதவுமா?

ஐந்து பெண்களைப் பெற்றவர், ஒவ்வொரு பெண்ணின் திருமணத்துக்கும் ஜாதகக் கட்டை எடுத்துக் கொண்டு அலையோ அலை என்று அலைந்து மாப்பிள்ளை தேடினார். இது போன தலைமுறை கதை! இந்தத் தலைமுறையில், ஒரே பெண்ணாக இருந்தால் கூட, பெற்றோர் ஜாதகத்தைத் தூக்கிக் கொண்டு அலைவதில்லை; நாளிதழ்களில் 'மணமகன் தேவை' என்று விளம்பரப்படுத்திச் சுலபமாகக் காரியத்தை முடித்துவிடுகிறார்கள்.

"வாழ்க்கையே இயந்திர கதியாகிவிட்ட இந்தக் காலத்தில் யாருக்கு சார் அலைய நேரமிருக்கிறது....?" என்கிறார் ஓய்வு பெற்ற இஞ்சினியர் வைத்தியநாதன். "பேப்பரில் விளம்பரம் கொடுத்தால் உட்கார்ந்த இடத்திலேயே நமக்குத் தேவையான மாதிரி வரன் கிடைத்துவிடும் என்றே அப்படிச் செய்கிறார்கள்" என்கிறார்.

"அது உண்மைதான் — என் இரண்டு பெண்களுக்கும் பேப்பரில் விளம்பரம் கொடுத்துத்தான் மாப்பிள்ளை கிடைத்தார்கள். ஒவ்வொரு விளம்பரத்துக்கும் சுமார் இருநூற்றைம்பது கடிதங்கள் வந்தன" என்கிறார் வங்கியில் பணியாற்றும் ஜெயலட்சுமி வெங்கட்ராமன்.

ஆனால் மற்றொரு நபரோ, "இதுவரை பேப்பரில் வந்த நூறு விளம்பரங்களுக்காவது என் பெண்ணின் ஜாதகத்தை இணைத்து, பதில் எழுதியிருப்பேன்... ஆனால் பலன் என்னவோ பூஜ்யம்தான்" என்று வருத்தப்படுகிறார். "விளம்பரம் செய்பவர்கள், மரியாதைக்காவது 'ஜாதகம் பொருந்தவில்லை' என்று பதில் போட வேண்டாமா?" என்று அங்கலாய்க்கிறார்.

"அது எப்படி சாத்தியம்!? நூற்றுக்கணக்கில் ஜாதகங்கள் வரும். நமக்குத் தேவையோ ஒரே ஒரு வரன்தான் — எனவே பல்வேறு தகுதிகளின் அடிப்படையில் இருபது — இருபத்தைந்து நபர்களைத் தேர்ந்தெடுத்து பதில் போடலாம். மற்றவர்களுக்குப் பதில் போடுவது சாத்தியமில்லை!" என்கிறார் மற்றொரு நபர்.

இந்த சிக்கலைப் பார்க்கும் போது, விளம்பரங்களுக்குப் பதில் எழுதுவதை விட, விளம்பரம் கொடுப்பதே மேல் என்று தோன்றிவிடக் கூடும். ஆனால் எல்லோரும் இப்படியே நினைக்க ஆரம்பித்தால் விளம்பரம் கொடுப்பதால் பலனே இல்லாமல் போய்விடுமே!

அலைந்து, திரிந்து வரன் தேடப் பெற்றோருக்கு நேரமில்லை என்பது ஒருபுறமிருக்க, இந்தக் கால இளைஞர்கள், யுவதிகளின் மனப்பான்மையும் மாறி வருகிறது.

வீடு வீடாகப் போய்ப் பெண் பார்க்கவும் பல மாப்பிள்ளைகளால் பெண் பார்க்கப்படவும் அவர்கள் தயாராயில்லை. எனவே செய்தித்தாள் விளம்பரம்மூலம் 'வடிகட்டல்' செய்து மிகப் பொருத்தமாகத் தோன்றும் ஓரிரு வரன்களை மட்டும் நேரில் பார்த்து

outlook for only daughter of Madras based Industrialist/Brahacharanam/Kapi/Anusham/clean and lucky horoscope/25/160 cms/D.E. completing B.Tech. shortly/versatile/well trained in business and industry/fair with good personality. Horoscope op-

ALLIANCE FROM Non Srivathsa Iyengar PG Doctor, Engineer, MBA, CA for Vadagalai fair, slim girl, Doctor, 23/165. Horoscope with details to Box No. 2668, C/o THE HINDU, Madras-600002.

WANTED TAMIL Iyer, non-Kous'ya, MBA/CA

முடிவு செய்கிறார்கள். செய்தித்தாள் விளம்பரத்தில் இவர்கள் தங்கள் எதிர்பார்ப்புகள் என்ன என்பதைக் கோடி காட்டி விடுவதால் வரும் கடிதங்களும் ஓரளவு பொருத்தமானவையாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

ஆனால், விருப்பு வெறுப்பின்றி **Matrimonial column** ஐப் படித்தால் தலை சுற்றும்! எல்லோருமே சிவப்பான, அழகான, குடும்பப்பாங்கான பெண்ணையோ, உயரமான, நன்கு சம்பாதிக்கும் **(well-placed)** மாப்பிள்ளையையோதான் விரும்புகிறார்கள்!

இவ்வளவு பேரின் எதிர் பார்ப்புகளையும் பூர்த்தி செய்ய வேண்டுமானால் ஊர் முழுதும் அழகான பெண்களும், நன்றாகச் சம்பாதிக்கும் இளைஞர்களும் தான் நிறைந்திருக்க வேண்டும்!

**மா**ப்பிள்ளை வீட்டாரின் 'முறுக்கு' மணமகன் தேவை' விளம்பரங்களுக்குப் பதில் எழுதும் போதே வெளிப்படுகிறது. அநேகம் பிள்ளை வீட்டார், எடுத்த எடுப்பிலேயே ஜாதகத்தை இணைத்து அனுப்பாமல், பூர்வாங்கமாக ஒரு கடிதம்தான் அனுப்புவார்கள். அதில், 'பெண் ஜாதகத்தை அனுப்பினால், நாங்கள் எங்கள் பிள்ளை ஜாதகத்தோடு பொருத்தம் பார்க்கிறோம்' என்று குறிப்பிடுவார்கள்!

திருமண விளம்பரம் கொடுத்த நபர் ஒருவருக்கு முற்றிலும் வித்தியாசமாய் ஒரு கடிதம் வந்தது. 'வசதியில்லாத காரணத்தால் என்னால் விளம்பரம் கொடுக்க முடியவில்லை. எனவே உங்களுக்கு வரும் ஜாதகங்களுள் பொருந்தாதவற்றைத் தயவு செய்து எனக்கு அனுப்பிவைத்து உதவுங்கள்.'

**செ**ய்தித்தாள் விளம்பரம் மூலம் திருமணம் நிச்சயப்பதில் உள்ள குறை ஒன்றையும் சுட்டிக் காட்டுகிறார் மதுமதி வாசன்: "நமக்குத் தெரிந்த இடங்களிலோ அல்லது தெரிந்தவர்கள் மூலமோ வரன் பார்த்தால் நன்றாக விசாரித்து, நல்ல இடமா என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம். விளம்பரம் மூலம் முற்றிலும் புதிய குடும்பத்தில் சம்பந்தம் செய்யும் போது இது சாத்தியப்படாமல் போகக்கூடும். எனக்குத் தெரிந்து ஒரு குடும்பத்தில் நடந்த சோகம் இது: விளம்பரம் கொடுத்தவர், தம் குடும்பத்தைப் பற்றிய விவரங்களைக் குறிப்பிடுகையில், ஹிஸ்டீரியா நோயாளியான சகோதரி ஒருத்தி மாப்பிள்ளைக்கு இருப்பதை மறைத்து விட்டார். இக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட பெண் மிகவும் பயந்த சுபாவமுள்ளவள். அவளால் அந்த சூழ்நிலையில் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அந்தக் கல்யாணம் டைவர்ஸில்தான் முடிந்தது!... எனவே செய்தித் தாளில் விளம்பரம் செய்து வரன் தேடுவோர் எல்லோருமே கண்ணியம் மிக்கவர்கள் என்று நம்பிவிடாமல் தூண்டித் துருவி விசாரிக்க வேண்டும்."

**இ**தற்கு மறுபுறமாக "ஒளிவு மறைவில்லாமல் உண்மையைச் சொல்லிப் பெண் கேட்போரும் இருக்கிறார்கள்" என்கிறார் கலா வெங்கடாசலம். "நாங்கள் விளம்பரம் கொடுத்த போது வந்த ஒரு பதிலில், ஒரு தந்தை, தன் மகன் முன்பு போதை மருந்துக்கு அடிமையாய் இருந்தான் என்றும் இப்போது முற்றிலும் குணமடைந்து புதிய மனிதனாக வாழ்கிறான் என்றும் குறிப்பிட்டிருந்தார்! அவருடைய வாய்மையைப் பாராட்டலாம், ஆனால் பெண்ணைக் கொடுக்க துணிச்சல் வருமா...?" என்கிறார் கலா.

**வி**ளம்பரத்துக்குப் பதில் போடும் வரன்களைப் பற்றிய விவரங்களைக் கண்டறிய, துப்பறியும் நிறுவனங்களை அணுகுவோரும் உண்டு! அத்தகைய நிறுவனம் ஒன்றின் அதிகாரி சொன்னார், "எல்லோருமே துப்பறியும் நிறுவனம் மூலம் விவரங்கள் அறிவது சாத்தியமில்லை. எனவே தீர விசாரிக்க அவர்களே தக்க முயற்சிகள் எடுக்கலாம். எடுத்தேன் கவிழ்த்தேன் என்று முடிவெடுக்காமல் வெகு ஜாக்கிரதையாகச் செயல்பட வேண்டும். குறிப்பாக, '**U.S. green card holder... visiting India... early marriage...**' என்று விளம்பரப்படுத்தினால் **double** ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!!"

— ஜானி.

## 'வேண்டாம் வரதட்சிணை; வேண்டும் வேலைபார்க்கும் மனைவி!'

**ஸ்வயம்வராலயா என்ற ஜாதகப் பரிவர்த்தனை நிலையத்தை லாப நோக்கின்றி நடத்திவரும் ஜெயலட்சுமி ஜம்புநாதன் கூறுகிறார்:**

- இளைஞர்களிடையே 'வரதட்சிணை வேண்டாம்' மனப்பான்மை வளர்ந்து, உறுதிப்பட்டு வருகிறது. ஆனால்...
- வேலைக்குப் போகிற பெண்கள் வேண்டும் என்று கேட்போர் அதிகரித்து வருகின்றனர்.
- ஜாதி விட்டு ஜாதி திருமணம் செய்து கொள்ள அதிகம் பேர் முன்வரா விட்டாலும் உட்பிரிவுகளுள் சம்பந்தம் செய்து கொள்ள அதிகம் பேர் முன் வருகிறார்கள்.
- விவாகரத்துக்குப் பின் மறுமணத்துக்கும் விதவைகள் மறுமணத்துக்கும் ஆதரவு பெருகியுள்ளது.



# குழந்தையின் கேள்விக்கு என்ன பதில்?

## பரிசு ரூ.250!

உங்கள் குழந்தைகள் (8 — 10 வயது) கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்கும் போது என்ன பதில் சொல்வீர்கள்? சரியான விடைகளை டிக் செய்து இந்தப் பக்கத்தைக் கத்திரித்து அனுப்புங்கள். முடிவு தேதி: 20.2.91. உறையின் மேல் "பெற்றோர் பதில்" என்று அவசியம் குறிப்பிடவும். ரொம்பப் பேர் சரியான பதில் எழுதி விட்டால் குலுக்கலில் பத்து பேர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

1. குழந்தை எப்படிப் பிறக்கிறது?

அ கடவுள், வீட்டுத் தோட்டத்தில் கொண்டு வந்து குழந்தையைப் போடுவார்.

ஆ ஆஸ்பத்திரியில் நர்ஸ் ஆன்டி கொடுப்பார்கள்.

இ குழந்தை வேண்டும் என்று அப்பாவும் அம்மாவும் ஆசைப்பட்டுக் கடவுளிடம் வேண்டிக் கொண்டு, ஒருவரிடம் ஒருவர் அன்பு செலுத்தும் போது அந்த அன்புக்குப் பரிசாகக் கடவுள் அம்மாவின் வயிற்றில் குழந்தையைக் கொடுப்பார்.

ஈ புத்தகத்தை வைத்துக் கொண்டு அளிக்கப்படும் விஞ்ஞான ரீதியான விளக்கம்.

2. அப்பா, நீங்கள் ஏன் சிகரெட் பிடிக்கிறீர்கள்?

அ சிகரெட் பற்றி நீ பேசக் கூடாது. வாயை மூடு!

ஆ சில பெரியவங்கள்ளாம் சிகரெட் பிடிச்சா ஒண்ணும் தப்பில்லை.

இ அப்பாவுக்கு வேலை அதிகமாகும் போது 'டென்ஷன்' வருகிறது. அதனால் பிடிக்கிறேன்.

ஈ ஏன் கேட்கிறே? சிகரெட் பிடிச்சா தப்பா? நீ என்ன நினைக்கிறே...?

3. 'செத்துப் போயிட்டார்'னு சொன்னா என்ன அர்த்தம்?

அ வயசானவங்க நடக்க முடியாம, மூச்சு விட முடியாம ஆயிட்டா அவங்க இறந்து போயிட்டதாக அர்த்தம்.

ஆ அப்படின்னா என்னன்னு சொன்னா உனக்குப் புரியாது.

இ எல்லாருமே ஒரு நாளைக்குச் செத்துப் போகத்தான் வேணும். கடவுள் நிர்ணயிச்சிருக்கிற தேதியில அது நடக்கும்.

ஈ எமன் வந்து பாசக்கயிறு வீசி அழைச்சுண்டு போகறதுக்குப் பேருதான் சாவு...

4. சத்தீஷ் வீட்டில் கலர் டி.வி.யும் டெக்கும் இருக்கு. நம்ம வீட்ல மட்டும் பிளாக் அண்ட் ஒயிட் டி.வி. தானே இருக்கு...?

அ நம்மைவிட சத்தீஷ் குடும்பம் வசதியான குடும்பம். அதனால் சில சௌகரியங்கள் ஜாஸ்தி...

ஆ இந்த மாதிரி ஒப்பிட்டுப் பேசக் கூடாது!

இ கொஞ்சம் நாள் கழிச்சு நாமும் வாங்கிடலாம்.

ஈ நம்ம வீட்டிலயாவது பிளாக் அண்ட் ஒயிட் டி.வி. இருக்கு... கிருபா வீட்டிலே 'டி.வி.'யே இல்லையே... அதனால் இருக்கிறதை வைச்சு சந்தோஷப்படணும்...

5. நம்ம வீட்ல வேலை செய்யற சுசிலாவோட பொண்ணு ராசாத்தி மட்டும் ஸ்கூலுக்குப் போறதில்லையே. நான் மட்டும் ஏன் போகணும்?

அ கேள்வியைத் தவிர்த்துப் பேச்சை மாற்றி விடுவீர்கள்.

ஆ இந்த மாதிரி ஒப்பிட்டுப் பேசக் கூடாதுன்னு எவ்வளவு தடவை சொல்லியிருக்கேன்...?

இ சுசிலா ஏழை. அவளால் ஸ்கூல் ஃபீஸ் கட்ட முடியாது. ராஜாத்தியும் வேலை செய்தா அவளுக்கும் பணம் கிடைக்கும். அந்தப் பணம் அவர்களுக்குப் பயன்படும்.

ஈ நீ ஏன் ராஜாத்திகூட பேசறே...? சமர்த்தா உன் பாட்டுக்கு இரு...

தொகுப்பு: **ஸி. எம்.**

**இந்தக் குவிஸ்ஸைத் தொகுக்க உதவிய டாக்டர் வில்வி நீலங்காவின் கருத்துக்கள், விடைகளுடன் பிரசுரமாகும்.**

பெயர் : ..........................

விலாசம்: ..........................

..........................

..........................



சிரிக்க வையுங்கள் : சிங்கப்பூர் செல்லுங்கள் !

50

# "பாடுவதற்கு முன் ரெண்டு மூணு விளம்பரம்!"

● நாகப்பட்டினத்தில் ஒரு ஹோட்டல். குடிநீர் ஒரே உப்புக் கரிப்பு. கைகழுவும் தண்ணீர் அதைவிட உப்பு. ஹோட்டலில் சாப்பிட்டு முடித்த ஒருவர் ஹோட்டல் காரரிடம் ஹோட்டலைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது போல, "உங்க ஹோட்டலில் எல்லாமே சிறப்புதான். வாடிக்கையாளர்களின் வசதிக்காக வாஷ்-பேஸினுக்கு வங்காள விரிகுடாவையே கொண்டு வந்துட்டீங்க!" என்றார். கிண்டலைப் புரிந்து கொண்டு வாடிக்கையாளர்கள் சிரிக்க, ஹோட்டல்காரர் ஙீ! ஙீ!

— மு. இராமகிருஷ்ணன், போடிநாயக்கனூர்.

● ● ●

மாப்பிள்ளையின் தந்தை: பெண்ணைப் பாடச் சொன்னால் அமைதியா இருக்காளே... ஏன்?

பெண்ணின் தந்தை: பாடுறதுக்கு முன்னாடி ரெண்டு மூணு விளம்பரம் சொல்லணும், அப்பத்தான் பாடுவா...!

— வலங்கை ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

● ● ●

● நண்பருடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். பேசிக் கொண்டிருக்கும் போது திடீரென்று, 'ஐயோ தலை வலிக்குதே!' என்றார்.

உடனே அவர் மனைவி, "இருங்க, காப்பி கொண்டு வர்றேன்" என்றார்.

உடனே நண்பர், "அட ராமா! நீ காப்பி கொண்டு வர்ற நேரமாச்சே என்பதை நினைத்ததில்தானே தலைவலியே வந்தது!" என்றாரே பார்க்கலாம்!

— எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

● ● ●

"அவரு பேய்க்கதை எழுத்தாளராயிருக்கலாம்... அதுக்காக இப்படியா...!"

"ஏன்... என்னாச்சு...?"

"புறப்பட்டுப் போகும் போது 'பேய்ட்டு வர்றேன்'னு சொல்லிட்டுப் போறாரே...!"

— லட்சுமி ஆவுடைநாயகம், சென்னை — 91.

● ● ●

● வீட்டின் வரவேற்பறை. உச்சியில் ஊஞ்சல் கட்டப்பட்டு ஒரு கிளி. அந்தக் கிளியின் ஒரு காலில் பச்சை நிற நூலும், மறுகாலில் சிவப்புநிற நூலும் கட்டப்பட்டுக் கீழே தரை வரை தொங்கிக் கொண்டிருந்தன. வீட்டுக்கு வந்த விருந்தாளியைக் கண்டதும் கிளிக்கு உடையவன் பச்சை நூலை ஒரு தரம் இழுத்தான். உடனே கிளி, "வாங்க! வாங்க! வணக்கம்! சௌக்கியமா? நீங்க வந்ததுலே ரொம்ப சந்தோஷம்!" என்றது.

விருந்தாளி விடைபெற்றுக் கிளம்பும் போது வீட்டுக்காரன் சிவப்பு நூலைக் கண்டினான். உடனே கிளி, "அப்ப சரி, போயிட்டு வாங்க! அடிக்கடி வந்து போயிக்கிட்டு இருங்க!" என்றது.

விருந்தாளி வியந்து கூவினார், "என்ன ஆச்சரியம்! பச்சை நூலை இழுத்தால் கிளி வரவேற்றுப் பேசுகிறது. சிவப்பு நூலை இழுத்தால் பிரியா விடை கொடுக்கிறது. இரண்டையும் சேர்த்து இழுத்தால் என்ன ஆகும்?"

கேட்டவுடனே கிளியிடமிருந்து, "அறிவு கெட்ட முண்டம்! கீழே விழுந்துடுவேண்டா!" என்ற பதில் அவசர அவசரமாக வந்தது!

— ஆர். சரஸ்வதி, பாண்டிச்சேரி — 3.

● ● ●



# டி.கே.ஜே.

ஒருமுறை டி. கே. ஜெயராமனின் கச்சேரியை 'light classical variety' என்பதாக ஒரு விமர்சகர் வர்ணித்திருந்தார். பலருக்கும் அந்த விமர்சனம் வருத்தத்தை அளித்த போதிலும் ஜெயராமனோ, ''அது ஒன்றுமில்லை. அன்று தமிழ்ப் பாட்டுக்கள் நிறையப் பாடினேனா... அவருக்கு அப்படித் தோன்றி விட்டது!'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

இப்படி அவர் இலேசாக எடுத்துக் கொண்டது டி. கே. ஜே. யை அறிந்தவர்களுக்கு வியப்பாயிராது. கச்சேரிக்குப் போக ரயிலேறிவிட்டால் உறக்கம் வரும் வரை தமாஷாக, சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருப்பார். பக்கத்து கம்பார்ட்மெண்ட்டில் இருப்பவர்கள் கூட வந்து விடுவார்கள், கேட்க!

இதே போன்ற நகைச்சுவை உணர்வு நிரம்பப் பெற்ற கல்கியிடம் டி. கே. ஜே. அளவற்ற மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார். இத்தனைக்கும் டி. கே. ஜே. பற்றி கல்கி அதிகமாக எழுதியது கூட இல்லை. அவர் சகோதரி டி. கே. பட்டம்மாள் குறித்துத்தான் ஏராளமாய் எழுதியிருக்கிறார். ஆனாலும் டி. கே. ஜே. யின் பாட்டு அரங்கில் முதன் முதலாக அறிமுகம் செய்து வைக்கப்பட்டதைப் பற்றி கல்கி சில வரிகள் எழுதியதை டி. கே. ஜே. அடிக்கடி நினைவு கூர்ந்து, 'அவருடைய ஆசிதான்' என்று சொல்லிக் கொண்டிருப்பார்.

அகாடமியின் 'சங்கீத கலாநிதி' பட்டம் பெற்ற போது தலைமை உரையில் கூட, கல்கி அவர்களைக் குறிப்பிட்டு அஞ்சலி செலுத்தினார். முதல் நாளன்று இந்த உரை அறிவைத் தொட்டது என்றால், கடைசி நாளன்று டி. கே. ஜே. யின் ஏற்புரை உள்ளத்தைத் தொட்டது. அன்று தமது தாயாரை நினைவு கூர்ந்தார். சகோதரி டி. கே. பட்டம்மாளுக்குச் 'சங்கீத கலாநிதி' விருது கிடைத்த போது தாயார், ''ஏண்டா, இந்தப் பட்டம் உனக்கும் கிடைக்குமோ?'' என்று கேட்டதையும் தாம் மழுப்பலாகப் பதில் சொன்னதையும் கூறி, ''இன்று நாமும் பட்டம் பெறுவதைக் காணத் தாயார் இல்லையே'' என்ற போது உணர்ச்சிவசப்பட்டார்.

பாடும் போதும் இவ்வாறே உணர்ச்சிவசப்பட்டுத்தான் பாடுவார், டி. கே. ஜே. கருத்தொன்றி, நெக்குருகிப் பாடும் போது ஏற்படும் பக்தி உணர்வு, ரசிகர்களையும் ஆட்கொண்டு விடும். ராக ஆலாபனையின் போது, ஒரு கைதேர்ந்த ஓவியன் ஒரு சில கோடுகளிலேயே ஓர் எழில் வடிவத்தை உருவாக்கிக் காட்டுவது போல, ராகத்தைக் கச்சிதமாகச் சித்திரிப்பார். கணக்கு வழக்கு அவர் பாட்டில் உண்டு. அதிலும் ஒரு கணக்கு உண்டு. அளவுக்கு மீறி யாரையும் சிரமப்படுத்த மாட்டார்.

டி. கே. ஜே. வாழ்க்கையில் கஷ்டப்பட்டு முன்னேறியவர். விடாமுயற்சியுடன் — ஒரு பிடிவாதத்துடன் உழைத்துப் பெற்ற வெற்றியாதலால் அவருக்கு அதில் நியாயமான பெருமையும் இன்பமும் உண்டு.

'ஒரு பல்கலைக் கழகம்' என்று செம்மங்குடி டி. கே. ஜே. யைக் குறிப்பிட்டது, அவர் நானூறுக்கும் மேற்பட்ட சிஷ்யர்களைக் கொண்டிருந்தார் என்பதற்காக மட்டுமல்ல; சங்கீத ஞானத்திலும் அவர் பல்கலைக் கழகமே.

டி. கே. ஜே. மறைந்த போது, ''சங்கீத கலாநிதி பட்டம் வாங்கவே காத்திருந்தது போலல்லவா இருக்கு?'' என்றுதான் பலரும் விசனத்துடன் எண்ணினர். கல்கி மறைந்த போது ராஜாஜி குறிப்பிட்டார்: ''தேய்பிறை காணாது பூரண சந்திரனாகவே புகழின் உச்சியில் தோய்ந்து மறைந்து போனார்'' என்று. அந்த வார்த்தைகள், கல்கி அவர்களிடம் பெருமதிப்பு வைத்திருந்த டி. கே. ஜே.க்கும் இன்று பொருந்துகின்றன.

— இ. ராஜேந்திரன்.

# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக "உண்ண" வேண்டுமே!

# இப்போது தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்(T)

உங்கள் வயிற்றில் இன்னொரு புதிய உயிர், உங்கள் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் சிசுவின் வளர்ச்சிக்கும், உங்கள் உடல் நலத்திற்கும் மிகத் தேவை சரியான ஊட்டச் சத்துக்கள். எனவே காம்ப்ளான்-விட்டாமில்க் அருந்துங்கள். இது கர்ப்பிணிக்கும் பிறக்கப்போகும் குழந்தைக்கும் உணவில் பற்றாத கூடுதல் ஊட்டச்சத்தை அளிக்கிறது.

காம்ப்ளான்-விட்டாமில்க்கில் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களும் உள்ளன. மேலும் உங்களுக்கும் பிறக்கப் போகும் குழந்தைக்கும் தேவையான கீழ்க்காணும் கூடுதல் ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.

கூடுதல் ஃபாலிக் ஆஸிடு
கூடுதல் பால்புரதம் (22.2 கிராம்)
கூடுதல் வைட்டமின் A, $B_6$ மற்றும் C
கூடுதல் இரும்புச்சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம்.

தினமும் 2 கப்புகள்




ரெகுலர் * சாக்லேட்



"மகளே!"

ஓய்வு பெற்ற நீதிபதி பாஸ்கரமேனன் குரல் கொடுத்தார். உள்ளே ஏதோ வேலையாக இருந்த சதி, சற்றுத் தாமதமாகவே வந்தாள்.

"என்னப்பா?"

"உன் அத்தை மகன் அனுப்குமார் கடிதம் எழுதியிருக்கான். தாயும் மகனும் நாளைக்கு வருகிறார்களாம். மற்ற விவரங்களை நீயே படிச்சுப் பாரு..."

கடிதத்தைக் கொடுத்தார்.

அவள் பிரித்துப் படிக்கத் தொடங்கிய போது, உள் அறையிலிருந்து தம்பி சுகுவின் முனகல் ஒலி வர, அவசரமாக உள்ளே போனாள் சதி.

மேனன் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

"சதிக்கும் அனுப்குமாருக்கும் கல்யாணம் முடிஞ்சுட்டா, எனக்கு ஒரு பெரிய பளுதீர்ந்தது...."

நெஞ்சு நிறைந்த ஆர்வத்தோடும் அவசரத்தோடும் ஊரிலிருந்து வந்து சேர்ந்



தான் அனுப்குமார். ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி என்கிற மிடுக்கு ஏதும் இன்றி, தெய்வத்தின் முன் யாசிக்கும் பக்தனின் மன நிலையில் அவள் முன் நின்றான். தங்களிடையே மலர்ந்திருந்த காதலை நினைவுபடுத்தினான். அந்தக் காதலுக்கு முழு வடிவம் கொடுப்பதற்குத் தங்களுடைய திருமணம் விரைவில் நடைபெற வேண்டும் என்கிற தன் விருப்பத்தை வெளியிட்டான்.

சதி யோசித்தாள்.

அது ஏன்? அவனுக்குப் புரியவில்லை. அவளிடமே கேட்ட போது, பதில் சொல்லத் தயங்கினாள்.

"இதுல தயங்கறதுக்கு எதுவுமே இல்லை சதி. பெரியவங்களும் அதைத்தான் விரும்பறாங்க. நம்மோட மனங்களும் ஒத்துப் போயாச்சு. அப்புறம் என்ன?"

"இல்லை அனுப். யோசிக்கணும். நிறைய யோசிக்கணும்."

"அதுதான் ஏன்னு கேட்கறேன்?"

"முக்கியமான காரணம் தம்பி சுகு. மூளை வளர்ச்சி இல்லாத பிள்ளை. தானா எதுவுமே செய்து கொள்ள முடியாதவன். அம்மா செத்துப் போனதுக்கு அப்புறம் அந்த இடத்துல நான்தான் இருந்து அவனுக்குத் தேவையானதையெல்லாம் கவனிச்சுச்



**திரைவிழாப் படக்கதை**
**(இந்தியன் பனோரமா — மலையாளம்)**

# ஒற்றையடிப் பாதைகள்

கிறேன். என்னோட சொந்த சந்தோஷத்துக்காக அவனை அனாதையா விட்டுர முடியாது."

"யார் விடச் சொன்னா? கல்யாணமாகி நீ என்னோட வரும்போது அவனும் கூட வந்துட்டுப் போறான்!"

"அது சரியில்லை அனுப். அந்தப் பளுவை உன் மேல சுமத்தறது சரியில்லை."

— சொல்லிவிட்டு உள்ளே போய் விட்டாள்.

அனுப்பை விட அதிக ஏமாற்றத்துக்கு உள்ளானார் மேனன். என்றாலும் அதை வெளியே காண்பித்துக் கொள்ளாமல் அவனிடம் பேசினார்.

"கொஞ்சம் பொறுத்துக்கோ அனுப். இங்கே உள்ள மருத்துவர்கள் பிரயோசனம் இல்லை. வேறே நல்ல சைக்கியாட்ரிஸ்ட்டிடம் காண்பித்து, சுகுவைச் சரிப்படுத்திடலாம். அதுக்குள்ளே சதியோட மனசு மாறிடும்."

"அதையேதான் நானும் சொல்ல நினைச்சேன், மாமா" என்றான் அவன். "நான் கலெக்டரா இருக்கற நகரத்துல ஒரு பெரிய ஸ்பெஷலிஸ்ட் இருக்கார். அவர் கிட்டே காண்பிக்கலாம்.

அடுத்தவாரமே அவர்கள் அந்த நகரத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

சதிக்கு நம்பிக்கையில்லை. அது ஒரு வீண் முயற்சி என்றே கருதினாள். என்றாலும் தந்தை அவ்வளவு தீவிரப்படும்போது அவளால் மறுத்துச் சொல்ல முடியவில்லை.

முடிவில் அவள் நினைத்தபடிதான் நடந்தது. அந்தச் சிறுவன் குணமடைய எத்தகைய வாய்ப்டம் இல்லையென்று அந்த ஸ்பெஷலிஸ்ட் கூறிவிட்டார். அவனைக் கவனித்துக் கொள்வதிலேயே தன் வாழ்நாளைச் செலவிட்டு விடுவது என்ற சதியின் முடிவு மேலும் வலுப்பட்டது.

மேனன் தவித்தார். தன்னுடைய இரண்டு குழந்தைகளின் வாழ்க்கையும் இப்படி ஆகிவிட வேண்டுமா? பிள்ளைக்கு மூளை வளர்ச்சி இல்லை. அதன் காரணமாகப் பெண் தன் வாழ்க்கையை ஒரு துறவியைப் போலக் கழிப்பது என்று தீர்மானித்து விட்டாள்.... இதற்கு ஒரு முடிவுதான் என்ன?

மிகுந்த யோசனைக்குப் பின் அவர் தீர்மானித்தார்.

சுகுவை நிரந்தரமாக ஒரு நர்ஸிங்ஹோமில் விட்டு விடுவது. சதியை அனுப்புக்குத் திருமணம் செய்து வைத்து விடுவது.

முடிவு செய்து விட்டாரே தவிர, செயல்படுத்த முடியவில்லை. சதியின் எதிர்ப்பு கடுமையாக இருந்தது.

"புரிகிறது அப்பா! எல்லாமே அனுப்பின் திட்டம் தான். எப்படியாவது என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்காக அனுப் உங்கள் மனத்தில் விதைத்து விட்ட திட்டம் இது. என்னால் இதை ஏற்றுக் கொள்ள முடியாது. கடைசிவரை சுகுவைக் கவனித்துக் கொள்ளப் போவது நான்தான். இந்தக் கல்யாணம் நடைபெறாது...."

மூன்றாவது நாளே சுகுவின் உடல் நிலை மோசமாகியது. அனுப் அவசர அவசரமாக மருத்துவர் ஒருவரை வரவழைத்தான். அவர் வந்து பார்த்து விட்டுச் சில மருந்துகளைக் கொடுத்து விட்டுப் போனார்.

மறுநாள் விடிந்த போது, சுகு இறந்து போய் விட்டிருந்தான்!

விழுந்து புரண்டு அழுதாள் சதி.

"எல்லாமே அனுப் செய்த சதி. என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்கிற ஒரே காரணத்துக்காக அனுப் செய்த சதி. நான் அனுப்பை விரும்பியது உண்மை. திருமணம் செய்து கொண்டு அனுப்போடு ஒரு மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்த வேண்டும் என்று ஆர்வம் கொண்டிருந்தது உண்மை. ஆனால் இப்போது? நான் அனுப்பை வெறுக்கிறேன். நெஞ்சின் ஆழத்திலிருந்து வெறுக்கிறேன்...."

நிகழ்ச்சிகளின் திருப்பம் மேனனை வெகுவாகப் பாதித்தது. அவர் தன்னிலை இழக்கத் தொடங்கினார். மற்றவர்களிடமிருந்து ஒதுங்கினார். கதவைச் சாத்திக் கொண்டு தனியாக அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டே இருந்தார். மற்ற நேரங்களில் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தார். ஒலியெதுவும் வெளியே வராமல் உதடுகள் மட்டுமே அசைந்தன.

பார்க்கப் பார்க்கச் சதியின் நெஞ்சில் வேதனைப் புயல். யோசித்து, ஒரு முடிவுக்கு வந்தாள்.

அவள் வாழ்க்கைப் பாதை தெளிவாகி விட்டது. இவ்வளவு நாட்கள் தம்பிக்காக வாழ்ந்து வந்தாள். இனிமேல் தந்தைக்காக.

தந்தையை அழைத்துக் கொண்டு தங்கள் ஊருக்கு உடனே புறப்படுவது என்று முடிவு செய்தாள் சதி.

அனுப்பின் மன வேதனை தாங்க முடியாததாக இருந்தது. அவன் விரும்பியது எல்லாம் நல்லது செய்ய வேண்டும் என்பது தான். சுகுவை எப்படியாவது குணப்படுத்தி விட வேண்டும். அதன்பின் சதியை மணந்து கொள்ள வேண்டும் என்பதுதான் அவன் நோக்கம்.

இப்போது எல்லாமே நேர்மாறாகப் போய் விட்டது. சதியின் நிரந்தர வெறுப்புக்கு ஆளாகி விட்டான். காலம்தான்



• மோமென்ட்ஸ் ஆஃப் லவ்...

## "இன்ஸ்பிரேஷன்"

படவிழா ஆரம்பமாகி ஒரு வாரம் ஆகியிருக்கும். ஒரு படக் காட்சி தொடங்குவதற்குச் சற்று நேரம் இருந்த போது பின் வரிசையில் ஓர் உரையாடல்:

"நமக்குச் சரியா இருக்கிறாப்பல உள்ள படங்களில ஒரு பத்து வரிசைப்படுத்தி எழுது."

சில நொடி இடைவெளிக்குப் பிறகு—

"'நிகிதா.' 'மோமென்ட்ஸ் ஆஃப் லவ்' இரண்டையும் விட்டுராதே..."

அருகில் அமர்ந்திருந்த நண்பர் கெகிகெத்தார்.

"தமிழ்ல எடுக்கக் கதை தேடறாங்க பார்த்தீங்களா! காப்பி அடிக்கிறதா நாம சொன்னா ஒத்துப்பாங்களா? இன்ஸ்பிரேஷன் அப்படீன்னு வாங்க."

மறுநாள் ஒரு டாக்குமென்டரி படத் தயாரிப்பாளரிடம் இந்த உரையாடலைக் கூறிய போது அவர் சொன்ன தகவல்:

"இவங்களை விட ஜாம்பவான் எல்லாம் இருக்காங்க. படம் பார்க்க வரும்போதே தேங்காய், சூடத்தோட வருவாங்க. தமிழ்ல எடுக்கத் தோதா இருக்குன்னு மனசுல பட்டாப் போதும். படம் முடிஞ்சு வெளியே வரும்போதே, படிக்கட்டிலேயே சூடத்தைக் கொளுத்தித் தேங்காயை உடைக்கப் பூஜை போட்டுருவாங்க..."

இந்தச் சிக்கலைச் சரிப்படுத்த முடியும். அது வரை காத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை. எனவே—

மேனனையும் சதியையும் அவர்கள் ஊருக்குக் கொண்டு போய் விடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினான் அனுப்.

அவருடைய துணிகளையும் இதர பொருள்களையும் தேடியெடுத்துப் பெட்டியில் அடுக்க முனைந்த போதுதான் அந்தக் காகிதங்கள் கிடைத்தன. தனிமையில் ஒதுங்கித் தனக்குத்தானே பேசியவாறு மேனன் எழுதிவைத்திருந்த காகிதங்கள்.

அதைப் படித்த போது அந்த உண்மை வெளிப்பட்டது.

சுகுவின் கோளாறுக்கு நிவாரணமே கிடையாது என்பது புரிந்து விட்ட போது— அதன் காரணமாக சதிக்கு நிரந்தரமாகவே மண வாழ்க்கையும் மகிழ்ச்சி நிறைந்த வருங்காலமும் இல்லாமல் போய் விடும் என்பது தெளிவாகிவிட்டபோது— சிக்கலைத் தீர்த்து மகளை அந்தப் பொறுப்பிலிருந்து விடுபடச் செய்யும் ஒரே திறவுகோல் சுகுவின் மரணம் தான் என்கிற முடிவுக்கு வந்து விட்ட மேனன் தன் மகனையே தீர்த்து விட்டிருந்தார்!

அந்த நிகழ்ச்சி கொண்டு தந்திருந்த மன அதிர்ச்சியின் பாதிப்புக்கு உள்ளாகி, தானே குற்றவாளியாகவும், தானே வக்கீலாகவும், தானே நீதிபதியாகவும் ஒரு கற்பனை நீதிமன்றத்தில் வழக்காடி, போதிய நிரூபணங்கள் இல்லாத காரணத்தால் தன்னைத் தானே விடுதலை செய்து....

அனைத்தையும் படித்து முடித்த போது, அனுப் நெடுநேரம் அதன் பாதிப்பிலிருந்து விடுபடவில்லை.

**ஊ**ர் போய்ச் சேர்ந்த போது இரவாகி விட்டது.

படுக்கைக்குப் போகு முன் சதியிடம் அந்தக் காகிதங்களைக் கொடுத்தான். சொன்னான்:

"தனியா இதைப் படிச்சுப்பாரு. காலையில நான் கிளம்பிப் போறேன். அம்மா கொஞ்ச நாளைக்கு உங்களுக்குத் துணையா இங்கேயே இருப்பா."

எந்தப் பதிலும் சொல்லாமல் அந்தக் காகிதங்களைப் பெற்றுக் கொண்டாள் சதி.

அதிகாலையிலேயே புறப்பட்டான் அனுப்.

அம்மாவிடம் விடைபெற்றுப் படியிறங்கித் தன் காரை நோக்கி நடந்தான்.

பின்னால் யாரோ ஓடிவரும் ஒலி.

நின்று திரும்பினான்.

சதிதான் விரைந்து வந்து கொண்டிருந்தாள். பெருகி வந்த அழுகையைக் கட்டுப்படுத்த முடியாமல் விம்மிக் கொண்டே வந்தவள் அவன் மார்பில் சாய்ந்தாள்.

"என்னை மன்னிச்சிருங்க..."

திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்த அவளை அப்படியே அணைத்துக் கொண்டான்.

மெள்ள அவன் பார்வை நிமிர்ந்த போது மொட்டை மாடியில் மேனன் தெரிந்தார். தூக்கத்தில் நடந்து கொண்டிருந்தார். நடந்து.... நடந்து... கைப்பிடிச்சுவரை நெருங்கி.... அதன் மீது ஏறி... மீண்டும் நடக்கத் தொடங்கி... வெட்ட வெளியில் கால் பதிக்க முயன்று.... தலைகுப்புற....

— சி. ஆர். கே.

# பானி மிக்ஸ்®

## உடனடியாகத் தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்.

## தானியங்கள், பழங்கள், முந்திரி கலந்த ஆகாரம்.

பானி மிக்ஸ் கோதுமை, சோளம், அரிசி, மாம்பழம், ஆப்பிள், பேரிச்சை, திராட்சை மற்றும் முந்திரி போன்ற வையிலான ஊட்டமிகு, எளிதில் ஜீரணிக்கக்கூடிய பாரிட்ஜ் ஆகாரம். குடும்பத்தினருக்கு காலை சிற்றுண்டிக்கும் மாலையில் பள்ளி அல்லது அலுவலக வேலைகளுக்குப் பின் அளிக்கவும் உகந்தது. முதியோருக்கும் நோயிலிருந்து குணம் அடைவோர்க்கும் ஏற்ற உணவு.




**நிமிடங்களில் தயார்**

பானி மிக்ஸை விரைவாகவும், எளிதாகவும் தயாரிக்கலாம்.




கிண்ணத்தில் தேவையான பானி மிக்ஸை எடுக்கவும்.




அதோடு முன்னமே கொதித்த பாலை போதுமான அளவு மெதுவாகச் சேர்க்கவும்.




மிருதுவான கிரீம் போன்ற பாரிட்ஜ் ஆகாரம் பெற மெதுவாகக் கலக்கவும்.




சுவையான ஒவ்வொரு ஸ்பூன் பாரிட்ஜ் உணவையும் உங்கள் குடும்பத்தினர் சுவைத்து மகிழ்வார்கள்.

**பானி மிக்ஸ்®**

இந்தியாவிலேயே முதன் முறையாக!




உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ.

GL/2/88-R-TAM




# கல்கி

1991 பிப்ரவரி 10
மலர் : 49 இதழ் : 28
பிரமோதூத தை 28




## சர்வோதய தினத்தில் ஒரு மாபெரும் சதி!

**கா**ந்திஜி சுட்டுக் கொல்லப்பட்ட தினத்தில் அவரது சமாதிக்கு மலர் வளையம் வைத்துவிட்டு, காந்தியத்தையும், ஜனநாயகத்தையும் குத்திக் கொன்றிருக்கிறார் பிரதமர் சந்திரசேகர். தமிழகச் சட்டமன்றத்தில் அறுதிப் பெரும்பான்மை பலத்துடன் ஆட்சி நடத்தி வரும் தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்து, சட்டமன்றத்தையும் கலைத்திருக்கிறார். இந்த ஆட்சிக் கலைப்பு, அதிகார துஷ்பிரயோகம் மட்டுமல்ல; அரசியல் சட்டத்துக்கு விரோதமானதும் ஆகும். இங்கே அமைதிக்குப் பங்கமில்லை; நிலையான ஆட்சி வழங்க முடியாத சூழல் இல்லை; அரசியல் சாசனத்தின் விதிகளின் படி ஆட்சி நடத்த முடியாத நிலை தோன்றவேயில்லை. பிறகு எதற்காக ஆட்சிக் கலைப்பு? ஒரு பொய்யை மறைக்க நூறு பொய் என்பது போல், அதர்மமான முறையில் பிரதமர் பதவிக்கு வந்த சந்திரசேகர், தொடர்ந்து பல அதர்மக் காரியங்களைச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளாகியிருக்கிறார் என்பதே காரணம்.

கருணாநிதி ஆட்சியில் குற்றம் குறைகள் பல உண்டு. அவ்வப்போது அவற்றை நாம் சுட்டிக்காட்டியும் வந்திருக்கிறோம். அவருக்காக நாம் பரிந்து பேச வேண்டிய அவசியமில்லை. ஆனால் ஜனநாயகத்துக்கும் அதன் சீரிய மரபுகளுக்கும் ஆபத்து வரும்போது கடுமையான கண்டனக் குரல் எழுப்பி மக்களை எச்சரிக்க வேண்டிய கடமை நமக்கு உண்டு. குறைகள் உள்ள ஆட்சிகள் எல்லாமே கலைக்கப்படத்தான் வேண்டும் என்றால் நாட்டில் மத்திய, மாநில அரசுகள் எதுவுமே மிஞ்சாது. எந்த ஆட்சியுமே நடக்காது. ஒரு தவறைத் திருத்துகிறேன் என்று கூறிக் கொண்டு அதை விடப் பெரிய தவறு செய்வது மூடத்தனமாகும். அதிலும் மாநில ஆளுனரின் கடுமையான எதிர்ப்பையும் புறக்கணித்து விட்டு, அறுபது சதம் மெஜாரிட்டி உள்ள ஒரு மாநில அரசை, ஒரு மைனாரிட்டி மத்திய அரசு கலைப்பது என்பது உச்சகட்ட அநீதி.

'ஆட்சியைக் கலைக்குமுன், ஆயிரம் தடவை யோசிப்பேன்' என்றார் பிரதமர். 'வதந்திகளைப் பரப்பாதீர்கள்; தி. மு. க. அரசைக் கலைக்கும் உத்தேசம் இல்லை; எச்சரித்துத் திருத்துவதே நோக்கம்' என்றார். நம்பினோம். முதுகிலே குத்திவிட்டார், புனிதமான சர்வோதய தினத்தில்!

நாடாளுமன்றத் தேர்தலில் தி. மு. க., மக்கள் ஆதரவைப் பெறவில்லை என்பது உண்மையே. ஆனால் சட்டமன்றத் தேர்தலின் போது, பிளவுபட்டு நின்று, அதனால்







காங்கிரஸின் ஆதரவையும் இழந்தது, அ. தி. மு. க. செய்த குற்றம்தானே? அதற்குரிய தண்டனையை உரிய கால அளவுக்கு அனுபவித்துவிட்டு, மறுபடி உரிய நேரத்தில் மக்கள் முன் நின்று அவர்கள் வாக்குகளைக் கோருவதுதான் முறையேயன்றி, குறுக்கு வழியில் ஆட்சிக் கலைப்பு செய்து பதவிக்கு வர முயல்வது அருவருக்கத்தக்கது. 'இலக்குகள் சரியாக இருந்தால் போதாது. அவற்றை அடையும் வழிகளும் சரியானவையாக இருக்க வேண்டும்' என்ற அண்ணாவின் வாக்கு, அவர் மடிந்த தினத்தில் மண்ணிலே போட்டு மிதிக்கப்பட்டிருக்கிறது.

நோயுற்றிருக்கும் நமது நாட்டுப் பொருளாதாரம் யுத்த நெருக்கடியால் மேலும் சீர்கெட்டிருக்கும் தருணத்தில்தான் சாலை மறியல் போராட்டம் நடத்தினார் ஜெயலலிதா! அதனை வெற்றிகரமாகச் சமாளித்தார் கருணாநிதி. 'சட்ட ஒழுங்கு சீர்குலைந்தது' என்று பழி சுமத்த உருவான சதி பிசுபிசுத்துவிட்டது. ஆனாலும் என்ன; ஆட்டைக் கொல்வது என்று தீர்மானித்துவிட்ட ஓநாய், 'நீ ஆற்றைக் கலக்காவிட்டால் என்ன? உன் தாத்தா கலக்கினாரே!' என்று கூறிவிட்டுப் பாயவில்லையா? அதுபோல், 'சட்ட ஒழுங்கை நிலைநாட்டினால் என்ன? விடுதலைப் புலிகளுக்கு அனுதாபம் காட்டுகிறாயே!' என்று கூறிப் பாய்ந்து விட்டது மத்திய அரசு.

விடுதலைப் புலிகளிடம் கருணாநிதிக்கு அனுதாபம் உண்டு என்பதை அவராலேயே மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. அது தவறான இடத்தில் செலுத்தப்படும் அனுதாபம் என்பது நமக்குத் தெரிகிறது. ஆனால் அவர்களும் தமிழர்கள் என்ற எண்ணமும் அவர்களது லட்சிய உறுதியும், கருணாநிதியின் கண்களை மறைக்கின்றன. கருணாநிதியின் அனுதாபம் அவர்களுடைய தனி ஈழ விடுதலைப் போரையொட்டித்தானேயொழிய, பாரதத்தைத் துண்டாடும் நோக்கு கலைஞருக்கு இருப்பதாக எந்தவித நிரூபணமும் கிடையாது. பிரதமர் எச்சரித்த பிறகு விடுதலைப் புலிகள் மீது தமிழக அரசு தீவிர நடவடிக்கை எடுக்கவே செய்தது. 'அவர்களைச் சமாளிக்கப் போலீஸ் போதாது; நவீன ஆயுதங்களுடன் பட்டாளங்களை அனுப்புங்கள்' என்று கருணாநிதி கேட்டுக் கொண்டார். அந்தக் கோரிக்கையைக் காதில் போட்டுக் கொள்ளாத மத்திய அரசு, இப்போது தி. மு. க. அரசு டிஸ்மிஸ் ஆனதையொட்டி, சட்ட ஒழுங்கு சீர்குலையலாம் என்று அஞ்சி, பதினாறு பட்டாளங்களை அனுப்பியுள்ளது!

ராஜீவ் — ஜெயலலிதாவின் வற்புறுத்தலை எதிர்த்துச் சமாளிக்க முடியாத சந்திரசேகர், தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்த அதே நேரத்தில், தமது ஆட்சிக்கும் காலக்கெடு நிர்ணயித்துக் கொண்டார்! ஏனெனில், இங்கே உரிய காலத்தில் சட்டசபைத் தேர்தல் நடக்கும் போது, கூடவே நாடாளுமன்றத் தேர்தலும் நடக்கும் என எதிர்பார்க்கலாம்!

சோதனையான இந்த நேரத்தில், அண்ணா வழியில் கண்ணியம், கட்டுப்பாடு காப்பது, தி. மு. க. தலைவர்கள், தொண்டர்கள் கடமை.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# சிவபெருமானை எந்தெந்த மலர்களினால் பூஜித்தால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்

| விரும்பும் பலன் | எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும் |
|---|---|
| 1. பெருஞ் செல்வம் விரும்புவோன் | தாமரை மலர், வில்வம், சதபத்திரம் சங்கபுஷ்பம், ஆகியவற்றால் லட்சக்கணக்கில் பூஜித்தால் சந்தேகமில்லாமல் பெருஞ்செல்வத்தைப் பெறுவான். |
| 2. இராஜபோகத்தை விரும்புவோன் | பழுதில்லாத பத்து கோடி மலர்களால் பார்த்திவ் லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும். அல்லது பத்து கோடி வில்வ தளத்தை சுகந்த சந்தனத்தில் தோய்த்துப் பூஜிக்க வேண்டும். இதற்கு தாமரை மலர்கள் அல்லது சங்க புஷ்பங்கள் பூஜிக்கத்தக்கவை. பிறகு தூபதீபன நைவேத்ய அர்கிய, ஆரார்திக் பிரதக்ஷிணை, நமஸ்கார, கூதமாபணவிஸர்ஜனத் முதலியவற்றைச் செய்தால் இஷ்ட போகமும் ராஜரீகமும் உலகநாயகரான சிவபெருமான் திருவருளால் கிடைக்கும். |
| 3. பிரதானித்துவத்தை விரும்புவோன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 4. சிறையிலிருந்து நீங்க விரும்புவோன் | லக்ஷம் புஷ்பங்களாலும் |
| 5. நோய்நீங்க விரும்புவோன் | ஐம்பதாயிரம் மலர்களாலும் |
| 6. அழகான மங்கையை மணம் செய்ய விரும்புவோன் | இருபத்து ஐயாயிரம் மலர்களாலும் |
| 7. கல்வியில் விருப்பம் கொண்டவன் | பன்னிராயிரத்து ஐநூறு மலர்களாலும் பூஜிக்க வேண்டும். |
| 8. கீர்த்தியடைய வேண்டியவர்கள் | பதினாயிரம் மலர்களாலும் |
| 9. முக்தி வேண்டியவன் | ஐந்து கோடி மலர்களாலும் |
| 10. ஞானம் வேண்டியவன் | கோடி மலர்களாலும் அர்ச்சனை செய்ய வேண்டும். |
| 11. சிவபெருமான் பிரத்தியட்சமாக வேண்டியவன் | அரைக் கோடி மலர்களால் அர்ச்சித்து மிருத்யுஞ்சய மந்திரத்தை ஐந்து லக்ஷம் முறை உரு ஜபிக்க வேண்டும். |
| 12. தேகத் தூய்மையை விரும்புவோன் | லக்ஷ மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 13. ஜன்மாந்திர ஞானம் விரும்புவோன் | இரண்டு லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |

# விரும்பும் பலன் எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும்

14. கர்ம தாசனம் வேண்டு பவன் ---- மூன்று லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.
15. ஸவ்பதை தரிசனம் வேண்டுபவன் ---- நான்கு லட்சம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.
16. தீர்க்காயுளை விரும்பு வோன் ---- லட்சம் அருகினாலும்
17. புத்திரப்பேற்றை விரும்பு வோன் ---- லட்சம் கருவூமத்தையாலும்
18. புகழை விரும்புபவன் ---- லட்சம் அகத்திப் பூவினாலும்
19. சித்தி முகத்தினை வேண்டியவன் ---- லட்சம் துளசியாலும்
20. சத்துருஷ்யம் வேண் டியவன் ---- லட்சம் லட்சம் வெள்ளெருக்க மலர்களாலும்
21. ரோக நீக்கம் விரும்பி யவன் ---- மாதுளை மலர், உற்பல மலர், சப்பாத்தி மலர்களாலும், கரவீர மலர்களாலும்
22. விஷ்ணுவின் அனுக்கிர கத்தை வேண்டுபவன் ---- அதஸிப் பூவினாலும் முக்திகாமி வன்னியினாலும்
23. தானியசம்பத்தை வேண்டியவன் ---- மலை மல்லியாலும்
24. வஸ்திர சம்பத்தை வேண்டியவன் ---- கோங்க மலராலும்
25. மனநிர்மலத்தை வேண்டு பவன் ---- நிர்க்குண்டியாலும் பூஜிக்க வேண்டும்.

சிவப் பிரீதியான மலர்கள் கிடைக்காவிட்டால் இதர மலர்களால் பூஜிக்கலாம்.

*எந்த மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது.*

சண்பகம், தாழை இவ்விரண்டு மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது

— சிவமஹாபுராணம்

# காப்பி 'மலிவு'; குட்டு 'காஸ்ட்லி'!

● சென்னையிலிருந்து வெகுதூரத்தில் இருக்கும் என்னைப் போன்ற வாசகர்கள், திரைப்பட விழாவை நேரில் கண்டு ரசிக்க முடியாதுதான். அப்படியிருக்கும் பொழுது, தாங்கள் 'கனடா' நாட்டுப் படமொன்றின் கதைக் கருக்கத்தினை வழங்கியது, அப்படத்தை நேரில் கண்டது போல் இருந்தது.

மூன்றடைப்பு. எஸ். ஆர். ஜெகனாத்.

● 'ஐ. ஏ. எஸ். பணியில் தமிழகம்' தலைநிமிர்ந்து நிற்பதற்கு அற்புதமான ஆலோசனைகள் வழங்கியுள்ளார் கார்த்திகேயன். இதுபோன்ற பயனுள்ள கட்டுரைகளைப் பக்குவமாகத் தருவதில் 'கல்கி'க்கே முதலிடம்!

கும்பகோணம். கே. என். பாலகிருஷ்ணன்.

● கொசு இல்லாத கிராமம் இருப்பது உண்மையிலேயே அதிசயமான செய்தி ஆகும்! வி. டி. ஆர். டி. நிறுவனத்தின் மூலம் தமிழக அரசும் கொசுக்களை ஒழிக்க முயற்சி எடுத்தால் பயனுள்ளதாக இருக்குமே!

கொணவட்டம். கே. ஆர். தேவேந்திரன்.

● 'சாம்பலிலிருந்து தங்கம்' தயாரிக்கும் சாமர்த்தியத்தை மட்டுமல்ல, பொய் சொல்லிக் கடன் வாங்கக் கூடாது என்ற ஹாஜி மு. அ. பீர்முகம்மதுவின் நேர்மையையும் நெஞ்சாரப் போற்றுகிறேன்.

'சன்னாசி பள்ளிக்கூடம் போகிறான்!' -- கமலா கந்தசாமியின் சிறுகதை மிகைப்படுத்தல்களின் மொத்த குத்தகை. ஒரு பள்ளியின் அத்தனை ஆசிரியர்களையும் பொறுப்பில்லாதவர்களாய்ச் சித்திரித்திருக்கிறாரே!

திருக்குவளை. வெற்றிப் பேரொளி.

● வறுமைதான் சன்னாசியின் கல்விப் பாதையைத் தடை செய்ததெனில், கூடவே அவனுடைய ஆசிரியர்களின் பொறுப்பற்ற செயலும் கைகோத்துக் கொண்டு அந்த இளம் பருவத்தின் ஆசையையும், எதிர்கால வாழ்க்கையையும் சூறையாடியதை உருக்கமாக விளக்கியிருந்தார் கமலா கந்தசாமி.

திருச்சி — 4. பா. கண்ணன்.

● ஆசிரியர் கிருஷ்ணா, 'நேசிக்கத் தெரிந்தவன்' கதையில், எமோஷனல் — பிராக்டிகல் லைஃப் — ஐ அருமையாக ஒப்பு நோக்கி, பிராக்டிகல் லைஃப்—இன் முக்கியத்துவத்துடன் முடித்த விதம் அபாரம்!

டி. வி. நல்லூர். நந்தன்பாலா.

● சத்தியசந்தன் எழுதிய 'பங்காளிகள்' கதை படித்தேன். ரோஜா இதழைத் தடவும் பனிக்காற்றாக நெஞ்சில் பாசம் குளிரடித்தது.

சென்னை — 28. எம். இளங்கோராஜன்.

● 'ஃபேஷன் — ஆண்களுக்கும் ஆசைதான்' கவர் ஸ்டோரி முற்றிலும் வித்தியாசமானது! கலாரசியமானது!

திருச்சி — 16. ஞானமிசைத்தன் எஸ். ராஜகோபால்.

● ராமஜென்ம பூமி பிரச்னையில் 'ஜோஷி'யின் நடவடிக்கை எப்படி இருக்கிறதோ! அதைப் பொறுத்தே பி. ஜே. பி. யின் எதிர்காலம் அமையும்.

யுத்தத்தைப் பற்றிய தங்களது தலையங்கம் படித்ததுடன் மனத்தில் சோகம் பரவியது. எதிர்கால உலகை இருளில் தவிக்க விட்டுவிடுவார்களோ என்கிற கவலையும், மனித இனத்தையே போரின் மூலம் மெள்ள மெள்ள அழித்துவிடுவார்களோ என்கிற அச்சமும் சேர்ந்து கொள்கிறது.

திருச்சி — 8. குருகிருஷ்ணா.

● போரில் இறங்கிய ஒரு வல்லரசு நாட்டின் கடமையை நினைவூட்டியதோடு, அது தன் சுயநலத்திற்கு ஆட்பட்டுவிடக் கூடாது என்றும் எச்சரித்திருப்பதன் மூலம் 'கல்கி'யின் தொலைநோக்குப் பார்வையை அறிய முடிகிறது.

சாலியமங்கலம். ப. சபாபதி.

● "இது கம்ப்யூட்டர் சாதனங்கள் நிறைந்துள்ள விஞ்ஞான உலகம் எனப் பெருமைப்படுகிறோம்! அதன் விளைவாக உருவாக்கப்பட்ட கருவிகளே, இன்று உலகத்தை அழிக்கும் சக்தியாக மாறியிருப்பது, வேதனை தருவதாகும். ஒரு தனிப்பட்ட மனிதனாகிய சதாம் உசேனுக்காக, இத்தனை உயிர்களும், உடைமைகளும் பலியாக வேண்டுமா, நினைக்கவே நெஞ்சு பதறுகிறது.

மொத்தத்தில், இந்த ஆண்டு துயரம் மிக்க ஆண்டு என்பதைத் தலையங்கத்தில், கறுப்பு பார்டர் போட்டு அடையாளம் காட்டியிருப்பது நல்ல பொருத்தம்!

கும்பகோணம். புலவர் எஸ். கே. மூர்த்தி

● மலிவு விலை காப்பி என்று நகைச்சுவையாக ஆரம்பித்துக் கடைசியில் 'நறுக்' என்று குட்டியுள்ளீரே பா. ரா! காப்பி மலிவோ இல்லையோ, குட்டு காஸ்ட்லி! கல்கியில் தொடர்ந்து குட்டுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

பட்டுக்கோட்டை. ராம்குமார்.

● சதாம், பேட்டை ரவுடி என்றால், அமெரிக்கா குட் கோட் போட்ட மாஃபியா தலைவன். சதாமை வளர்த்து விட்டதே அமெரிக்காதான். போர் ஆயுதங்கள் தந்து, அமெரிக்காவும், ருஷ்யாவும், பிரான்ஸும், ஜெர்மனியும் சதாமைக் கொடூரமானவராக ஆக்கின. போர்த் தளவாட வியாபார நோக்கில், நேற்று வரை நண்பர்களாக இருந்தவர்கள் இன்று எதிரிகளாகியிருக்கிறார்கள்.

"குவைத்தை விடுவிக்கிறேன்" என்று நேச நாடுகள் செய்வதென்ன...? ஈராக்கைப் பூண்டோடு அழித்துவருகிறார்கள். சதாம் செய்தது தவறுதான். அதற்காக உலகெங்கும் எதிர்ப்புக் குரல் எழும்பியுள்ளது. 'அவசர, முரட்டு, முட்டாள் சதாம்தான் தவறு செய்வானுமா...? நாங்களும் நல்லாத் தவறு செய்வோமே...' என்று நேச நாடுகள் இறங்கலாமா?

ஈராக்குடன் எந்தவிதக் கொடுக்கல் வாங்கல் வைக்கக் கூடாது என்று ஐக்கிய நாடுகள் சபை உலக நாடுகளைக் கேட்டுக் கொண்டுள்ளது. இந்தப் பொருளாதாரத் தடையை இன்னும் சில மாதங்களுக்கு இறுக்கிப் பிடித்தால் "வேண்டாம் இந்த குவைத்..." என்று பரிசாகவுடன் சதாம் திருப்பிக் கொடுத்திருப்பாரே!

ஈராக் மக்களுக்கு இப்படி ஒரு சோதனையை, சதாம் ஏற்படுத்தித் தந்திருக்க வேண்டாம். உலக நாடுகளின் வேண்டுகோள்களை மதித்து, குவைத்தை விட்டு வெளியேறியிருந்தால் சதாம் எவ்வளவோ உயர்ந்திருப்பார்!

கொச்சி — 11. எஸ். லாஜா நதி முதீன்.

# கோவையில் வளரும்



## 'அடுப்பங்கரை விஞ்ஞானம்!'

**ரா**ஜம்மாள் ரொம்ப ஆசைப்பட்டு பி.எஸ்.ஸி., கணிதம் வகுப்பில் சேர்ந்தாள். சென்னை கிறிஸ்துவக் கல்லூரி முதல்வர் ஃபாதர் பாய்டுக்கு, மாகாணத்திலேயே சிறந்த மாணவி தம் கல்லூரியில் சேர்ந்தது குறித்து ஏக பெருமை. ராஜம்மாளுக்கு உதவித் தொகையாக ஆண்டொன்றுக்கு 1500 ரூபாய் வழங்கப் போவதாக அறிவித்தார்.

இது நடந்தது 1942 இல். சிறந்த மாணவர்களுக்கு எல்லா கல்லூரிகளும் போட்டி போட்டுக் கொண்டு 'சீட்' கொடுத்த காலம் அது! ராஜம்மாள் 'ராங்க் ஹோல்டர்' என்று தெரிந்ததும் ராணி மேரி கல்லூரி முதல்வர் கே. எம். மையர்ஸ், அவரைத் தமது கல்லூரிக்கு வந்து விடுமாறு அழைத்தார். 'பி.எஸ்.ஸி., ஹோம் சயன்ஸ் வகுப்பைப் புதிதாக ஆரம்பித்திருக்கிறோம் அதில் உன்னைப் போல் புத்திசாலி மாணவிகள் சேர வேண்டும்' என்றார்.

ராஜம்மாளுக்குக் கணிதத்தை விட மனமேயில்லை. 'கல்லூரியில் சேர்ந்து, போயும் போயும் ஹோம் சயன்ஸா படிப்பது! அதனால் என்ன பயன்?' என்று யோசித்தார். ஆனால் முதல்வர் மையர்ஸ் வற்புறுத்தினார்.

"கிறிஸ்துவக் கல்லூரியில் எனக்கு 1500 ரூபாய் உதவிச் சம்பளம் தருவதாகக் கூறியிருக்கிறார்களே!" என்று காரணம் காட்டி நழுவப் பார்த்தார் ராஜம்மாள்.

"நான் இரண்டாயிரம் ரூபாய் தருகிறேன், இங்கே வந்து விடு" என்று மையர்ஸ் மீண்டும் வற்புறுத்த, ராஜம்மாள் மனமேயின்றித்தான் ஹோம் சயன்ஸ் வகுப்பில் சேர்ந்தார்.

திருமணமாகிய பிறகு மேல் படிப்பைத் தொடர முனைந்திருந்தார் ராஜம்மாள். காவல் துறையில் பணியாற்றிய அவர் கணவர், தம் நண்பர்களிடம், 'என் மனைவி I.C.S. — அதாவது **Indian Cooking Service** — பாஃ

கிறாள்' என்றுதான் சொல்வாராம்!

அரை மனத்தோடு ஹோம் சயன்ஸ் வகுப்பில் சேர்ந்து, அதற்காகக் கேலிக்கும் கிண்டலுக்கும் உள்ளாகிய ராஜம்மாள், இன்று ஆல விருட்சமாய் கிளை பரப்பி நிற்கும் கோவை அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரியின் தலைவி. ஆயிரக்கணக்கான மாணவிகளுக்கு மனையியலில் பயிற்சி அளிக்கும் இக் கல்லூரி ஒரு பல்கலைக்கழக அந்தஸ்துக்கு அரசாங்கத்தால் உயர்த்தப்பட்டிருக்கிறது.

**ஹோ**ம் சயன்ஸ் வகுப்பில் சேர்ந்து படிக்க ஆரம்பித்த பிறகு அடுப்பங்கரை



* ஆனி, ஆர்த்தி

விஞ்ஞானத்தின் முக்கியத்துவத்தை முற்றிலுமாக உணர்ந்திருந்தார் ராஜம்மாள். கணிதத்தின் பால் அவர் கொண்டிருந்த காதல், கணிதம், ரசாயனம், உணவியல், மனவியல், நிர்வாகம், மனோதத்துவம் உள்பட பல்வேறு வகையான விஷயங்களைக் கற்றுத் தந்த மனையியலின்பால்.பன்மடங்கு வேகத்துடன் திரும்பியது. மிகச் சிறந்த மாணவியாகப் பிரகாசித்து, அரசுப் பணியில் அமர்ந்து, சில ஆண்டுகள் கழித்து, அயல்நாட்டில் ஹோம் சயன்ஸில் மேல் படிப்புப் படிக்க அரசாங்கத்தாலே அனுப்பி வைக்கப்பட்டார். ஓஹையோ பல்கலைக் கழகத்திலிருந்த போதுதான் 'நம் நாட்டில் மனையியலுக்கென்று ஒரு கல்லூரி ஆரம்பிக்கலாமே' என்ற எண்ணம் தோன்றியது. பெண்கள் கல்வியில் ஆர்வம் காட்டிய, கோவை, அவினாசிலிங்கம் செட்டியாரைச் சந்தித்தது நினைவு வர, அவர் உதவியுடன் தம் கனவை நனவாக்க முடியும் என்ற நம்பிக்கை பிறந்தது.

ராஜம்மாள் தேவதாஸிடம் இலட்சிய நோக்கு இருந்தது; அவினாசிலிங்கம் செட்டியாரிடம் பெருநிதியும் அதனைப் பொது நலத்துக்குப் பயன்படுத்தும் பக்குவமும் தொலைநோக்கும் இருந்தன. இவ்விருவரும் சேர்ந்து ஆரம்பித்த அவினாசிலிங்கம் செட்டியார் மகளிர் மனையியல் கல்லூரிக்கு (பல்கலைக் கழகம்) இன்று முப்பத்து மூன்று வயதாகிறது!

**து**ணை வேந்தர் திருமதி. ராஜம்மாள் தேவதாஸைச் சந்தித்துப் பேசினோம்.

''அய்யா அவர்கள் (அவினாசிலிங்கம் செட்டியார்) இக் கல்லூரியைத் துவக்கிய போது, 'வெறும் ஏட்டுக் கல்வி அளிக்கும் பாடத் திட்டத்தால் பயனில்லை; வாழ்க்கைக் கல்வியை நாம் வழங்க வேண்டும்' என்று விருப்பம் தெரிவித்தார். எனவே, ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பிறகு, மேற்கத்திய வாடையற்றப் பாடத் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. ஐந்து பி. எஸ். ஸி. வகுப்புகள், ஏழு எம். எஸ். ஸி., வகுப்புகள் இந்தப் பல்கலைக் கழகத்தில் உள்ளன. இவற்றுள் எதில் சேர்ந்து பயின்றாலும் இந்தியப் பண்பாட்டைப் போற்றிக் காக்கவல்ல, சமுதாயப் பிரக்ஞையுடைய பட்டதாரிகளாகத் தான் மாணவிகள் வெளிவருவார்கள்.

"குறிப்பாக, சமூக, பொருளாதார நிர்ப்பந்தத்தால் வீட்டுப் பொறுப்பையும் அலுவலகப் பொறுப்பையும் ஒருங்கே சுமக்கும் பெண்களுக்கு இந்தப் படிப்பு வெகு உபயோகமாக இருக்கும்'' என்று முடிக்கினார் துணைவேந்தர். மாணவிகள் என்ன நினைக்கிறார்கள் என்று கேட்டுப் பார்த்தோம்.

''எனக்குக் கைவினைக் கலைகளில் ஈடுபாடு அதிகம். அதனை வளர்த்துக் கொள்ள நிறைய வாய்ப்புக் கிடைக்கும் என்று எண்ணியே மனையியல் வகுப்பில் சேர்ந்தேன்... நான் நினைத்ததைக் காட்டிலும் மிக அதிகமான விஷயங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறேன்...'' என்கிறார் ஆனி. இவர் மாணவிகள் சங்கத்தின் துணைத் தலைவி.

**ஆ**ர்த்தி என்ற மாணவியோ ''என் பெற்றோர் வற்புறுத்தியதால்தான் இந்த வகுப்பில் சேர்ந்தேன். ஆனால் படிக்க

* அவினாசிலிங்கம் செட்டியார்





* கிராம விழிப்புணர்ச்சித் திட்டத்துக்குக் கலை நிகழ்ச்சி.

ஆரம்பித்த பிறகு எனக்கே ரொம்பவும் பிடித்துப் போயிற்று... முழுமையான, பல்முனை வளர்ச்சிக்கு இந்தப் படிப்பு உதவும்...'' என்றார்.

''எல்லாம் சரி! மனையியல் கல்வி, மனத்தளவிலும் உணர்வுபூர்வமாகவும் இருமணத்துக்கு உங்களைத் தயார் செய்கிறதா?'' என்று கேட்டோம் மாணவிகளிடம்.

''ஓ! குழந்தை பிறப்பு முதல் படிப்படியான வளர்ச்சி, முதுமை வரை பல்வேறு வாழ்க்கைக் கட்டங்கள் பற்றி நாங்கள் பயில்கிறோம்'' என்றனர் மாணவிகள்.

''உங்கள் பயிற்சியிலும் பாடங்களிலும் குடும்பத்தில் கணவனின் பங்கு பற்றி யோசிக்கவோ தெரிந்து கொள்ளவோ வாய்ப்பிருக்கிறதா?'' என்று கேட்ட போது, ''இல்லை'' என்ற பதிலையே அளித்தார்கள் மாணவிகள்.

அருகேயிருந்த மனையியல் துறை மன் சாந்தா கூறினார்:

''கணவனின் பங்கைப் பற்றி நாங்கள் சொல்லித் தராவிட்டாலும் நிர்வாகப் பாடத்தில், முடிவுகள் எடுத்தல் மற்றும் பணிப் பங்கீடு பற்றிச் சொல்லித் தருகிறோம். எல்லா வேலைகளையும் பெண்கள்தான் செய்ய வேண்டும் என்றோ, பெண்ணின் கடமை வீட்டு நிர்வாகம்தான் என்றோ நாங்கள் வலியுறுத்துவதில்லை. ஆனால், மாணவிகளிடையே நற்பண்புகளை வளர்க்கும் விதமாக, பரமஹம்சர், விவேகானந்தர், சாரதா அன்னையார் போன்றோரின் கோட்பாடுகளை அவர்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம்; பிரார்த்தனைக் கூட்டங்கள் நடத்துகிறோம்; ஆன்மிக ஈடுபாட்டுக்கு வழி செய்து தருகிறோம். இதனால் மாணவிகள் சுயமாகச் சிந்தித்து, சுயநலமின்றி முடிவுகள் எடுக்கும் ஆற்றலுடன் வாழ்க்கையின் சவால்களைச் சந்திப்பார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

''**In house training** என்ற பயிற்சியில், மாணவிகள் சுமார் ஒரு வார காலத்துக்குச் சிறு சிறு குழுக்களாகப் பிரிந்து, சின்ன குடில்களில் 'குடித்தனம்' நடத்த வேண்டும். குழந்தை வளர்ப்பு, பராமரிப்பு, பற்றி நேரடியாக அவர்கள் உணர்ந்தறிய எங்கள் கல்லூரி வளாகத்திலேயே அமைந்துள்ள



* உணவு ஆய்வுக் கூடத்தில் ஆராய்ச்சி மாணவி.

நர்சரி பள்ளியில் பயிற்சிக்கு அனுப்பப்படுகிறார்கள். அவர்களுடைய சமுதாயப் பார்வையை விரிவடையச் செய்ய கிராமங்களில் முகாம்கள் நடத்தி அங்குள்ள பெண்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்த திட்டங்களை வகுக்கச் செய்கிறோம்.

அடிப்படைகளை விஞ்ஞானம் என்று



* துணை வேந்தர்



"நான் ஒரு வியாபாரம் ஆரம்பிக்கலாம்னு இருக்கேன். பாங்க்லே 'லோன்' வாங்கிக் குடுக்கறீங்களா?"

"என்ன வியாபாரம்?"

"பதுக்கல் வியாபாரம்!"

கேலியாகக் குறிப்பிடப்படும் கல்விக்குள் தான் அகில உலகமே அடங்கியிருக்கிறது என்று புரிந்து கொண்ட உணர்வோடு.

கோவையை விட்டுப் புறப்படும் முன் மனையியல் கல்லூரியின் ஸ்தாபகர் அவினாசிலிங்கம் செட்டியாரைச் சந்திக்கச் சென்றோம். தமது வாழ்க்கையைச் சுதந்திரப் போராட்டத்துக்குப் பின்னர் கல்விப் பணிக்கும் அர்ப்பணித்த அவர், தள்ளாத 87 வயதிலும் நம்மை வரவேற்று உபசரித்தார்.

'பெண்களுக்கு ஒரு கல்லூரி, அதுவும் மனையியல் கல்லூரி ஆரம்பிக்க விரும்பியது ஏன்?' என்று அவரிடம் கேட்டோம்.

"எல்லாத்துக்கும் அம்மாதான் காரணம்" என்றவர், துணைவேந்தரைச் சுட்டிக்காட்டினார்.

"தமது தாயார் விட்டுச் சென்ற சொத்தைப் பெண்களின் நலனுக்காகப் பயன்படுத்த விரும்பினார் அய்யா. அதனால் உண்மையில் இந்தப் பல்கலைக் கழகம் ஆரம்பிக்கப்படக் காரணம் அவர் அம்மாதான்" என்றார் ராஜம்மாள் தேவதாஸ்.

— சீதா ரவி.

வண்ணப்படம், படங்கள்: யோகா.

# இனிது... ஆபீஸ் இனிது



"ஏண்டா, என் பிள்ளைக்கு ஒரு வேலை பார்த்து வைக்கக் கூடாதா?'' என்றாள் காமு அக்கா.

''ஓ! கண்டிப்பா செய்யறேன். அடுத்த வாரம் எங்க டிபார்ட்மெண்ட்லே வேலைக்கு ஆள் எடுக்கப் போறாங்க. நான் என் ஆபீஸர்கிட்டே சொல்லி...'' — என்னை முடிக்க விடவில்லை, அக்கா.

''இதப் பாரு. கவர்ன்மெண்ட் வேலைன்னா என் பிள்ளைக்கு வேண்டாம். ஏற்கெனவே ஒரு அரசாங்க உத்தியோகஸ்தரைக் கட்டிட்டு நான் படுகிற அவஸ்தையை எனக்கு வரப் போகும் மாட்டுப் பொண்ணும் பட வேண்டாம்.''

நான் ஆச்சரியத்துடன் அக்காவைப் பார்த்தேன். அரசாங்க வேலை வேண்டும் என்று அவனவன் நாயாய் அலைகிற இந்தக் காலத்தில் பலமான சிபாரிசுடன் கண்டிப்பாகக் கிடைக்கக்கூடிய ஓர் அரசாங்க வேலையை வேண்டாம் என்கிறாளே!

''அரசாங்க வேலை வேண்டாம் என்று சொல்கிற முதல் ஆள் நீயாகத்தான் இருப்பாய். அது சரி, ஏன் சர்க்கார் உத்தியோகமே கூடாது என்கிறாய் உன் பையனுக்கு?''

''உங்க அத்திம்பேருக்குக் கழுத்தை நீட்டின நாள் முதல் இன்று வரை சுகத்துக்கு ஒரு குறைச்சலில்லை. ஆனால் வீட்டிற்கு வந்தும் இவர் செய்கிற ஆபீஸ் தர்பார் இருக்கிறதே, அதைப் பொறுக்க முடியாமத்தான் அப்படிச் சொன்னேன்.''

''அப்படியா?''

''அதை ஏண்டாப்பா கேட்கிறே? போன வாரம் ஏதோ அரியர்ஸ் பணம் வந்தது. அவருக்கு. ஆசையாய் ஒரு நகை பண்ணிப் போடச் சொன்னேன்...''

''முடியாதுன்னு சொல்லிட்டாரா?''

''இல்லையே! நகை செய்துக்கப் போறேன்னு ஒரு 'அப்ளிகேஷன்' எழுதிக் கொடு. 'கன்ஸிடர்' செய்யறேன்'னு சொல்லிட்டார்!''

''நீ அப்ளிகேஷன் எழுதிக் கொடுத்தாயாக்கும்?''

''பேய்க்கு வாழ்க்கைப்பட்டா முருங்கை மரம் ஏறித்தானே ஆகணும். விண்ணப்பம் எழுதிக் கொடுத்தேன்.''

''பணம் கொடுத்தாரோ?''

''இல்லையே. 'அப்ளிகேஷனோட 'கொட்டேஷன்' கொடுக்கலையாம். 'விண்ணப்பம் நிராகரிக்கப்பட்டது'ன்னு எழுதிக் கொடுத்துட்டார்!''

ஜி. மோகன்

"ஐய்யய்யோ. அப்புறம்?"

"அப்புறம் என்ன? நாலு கடை ஏறி இறங்கி அவர் கேட்ட கொட்டேஷனை வாங்கி... அதுதான் போகட்டும். காய்கறிகாரனுக்கும், பால்காரனுக்கும் கொடுக்கிற பணத்துக்குக் கூட 'வவுச்சர்' கேட்டா நான் என்னடா பண்ணுவேன்?"

"என்னதான் செய்யறே?"

"அவங்க பேர்லே நானே ஒரு வவுச்சர் புத்தகம் அச்சடிச்சு வச்சுக்கிட்டுச் சமாளிக்கறேன்!"

"ஜாக்கிரதை. அவருக்குத் தெரிஞ்சா உன்னை 'சஸ்பெண்டு' செய்திடப் போறார்!"

"அப்படி எழுதியிருந்தா யாராலே மாத்த முடியும். நம்ம மாதிரி மத்தியதரக் குடும்பத்துலே 'பட்ஜெட்' போட்டுக்கிட்டுத்தான் செலவழிப்போம். ஆனால் இவர் போடுகிற பட்ஜெட் இருக்கே. அது அலாதியானது!"

"அதையும்தான் கொஞ்சம் சொல்லேன்.

"வீட்டுச் செலவு எத்தனை உண்டோ அத்தனைக்கும் ஒவ்வொரு ரிஜிஸ்டர். வீட்டு வாடகை ரிஜிஸ்டர்; வண்ணான் கூலி ரிஜிஸ்டர்ன்னு வீட்டுலே ஒரு நாப்பத்தஞ்சு ரிஜிஸ்டராவது இருக்கும். ஒவ்வொரு மாதமும் செலவுக்குப் பணம் கொடுக்கும் பொழுது, போன மாதம் நான் செய்த செலவை ரிஜிஸ்டரில் 'என்ட்ரி' போட்டிருக்கேனான்னு பார்த்துட்டுத்தான் பணம் தருகிறார். கேட்டால் 'இது ஆடிட். பணம் கொடுக்கிற உரிமை எனக்கிருக்கும் பொழுது செலவுகளைத் தணிக்கை செய்யும் உரிமையும் உண்டு' என்கிறார்."




சற்று நேர மௌனத்திற்குப் பிறகு மீண்டும் தொடர்ந்தாள், அக்கா.

"போன மாதம் நம்ம அனந்துவுக்குக் கல்யாணம் ஆச்சு. நினைவிருக்கோ?"

அனந்து எங்கள் மாமா பிள்ளை.

"கல்யாணத்துக்கு அனுப்பமாட்டேன்னு சொல்லிட்டாரா?"

"அந்தக் கூத்தை ஏன் கேட்கிறே. கல்யாணத்திற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்னாலேயே பத்திரிகை வந்து விட்டது. அவர்கிட்டே சொன்னேன். 'பத்திரிகை எங்கேயிருந்து வந்தது?' என்றார்."

"பம்பாயிலிருந்து" என்றேன்.

"சரி. பத்திரிகை வந்ததை 'இன்வர்ட்' ரிஜிஸ்டர்லே எழுதினியா? போஸ்ட்மேன் தானே பத்திரிகையைக் கொடுத்தான்? அவனுக்கு 'அக்னாலெட்ஜ்மெண்ட்' கொடுத்தியா? பம்பாய் போக வர ஆகக் கூடிய செலவுக்கு 'பட்ஜெட்' போட்டு என் பார்வைக்கு வைத்தியா? இந்தச் செலவை 'முக்கியஸ்தர்கள் நிவாரண நிதி' என்கிற தலைப்பில் கணக்கு காட்ட வேண்டும். தெரியுமில்லையா? அந்த நிதியில் வைப்பு இல்லாவிட்டால் இதர நிதியிலிருந்து மாற்றல் செய்து கொள்ளலாம். அப்படின்னு ஒரு பெரிய லெக்சரே கொடுத்துட்டார். ஏண்டா, நான் படித்த எட்டாம் கிளாஸ் படிப்புக்கு இதெல்லாம் முடியக் கூடிய காரியமா?"

அக்காவைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. பெண்கள் கல்யாணத்திற்குப் பிறகு, பருத்து விடுவார்கள். ஆனால் அக்கா பாதியாக இளைத்திருந்தாள். கண்களுக்கு அடியில் கருவளையம் விழுந்து...

"ஏன் அக்கா, ராத்திரியிலே சரியா தூங்கறதில்லையா?"

"தூங்க எங்கடா நேரம்? நாப்பத்தஞ்சு ரிஜிஸ்டரை 'மெய்ன்டெய்ன்' செய்து, 'இன்லண்டு' லெட்டரிலேர்ந்து டெலிஃபோன் பில் வரை 'இன்வர்ட்' செய்து... அப்பப்பா, இந்த மனுஷன்கிட்டே நான் படுகிற அவஸ்தை இருக்கே... ஏண்டா, நீயாவது உங்க அத்திம்பேர்கிட்டே சொல்லக் கூடாதா. 'இது அரசாங்க ஆபீஸ் இல்லே அத்திம்பேர். இது வீடுன்னு!' என்று கெஞ்சினாள் அக்கா.

"சரி, நான் நாளைக்கே வருகிறேன்" என்று சொல்லி அக்காவை அனுப்பி வைத்தேன்.

மறுநாள், ஒரு டஜன் வாழைப் பழத்தை வாங்கிக் கொண்டு, காச்சிகூடாவிலிருக்கும் அக்கா வீட்டிற்குச் சென்றேன்.

அக்காதான் வரவேற்றாள்.

"அத்திம்பேர் எங்கே, அக்கா?"

## பாக்கெட்டில் பணம்!

செல்வந்தனும் துறவியுமான இரு நண்பர்கள், ஓர் ஆற்றங்கரையில் சந்தித்தனர். அந்தப் பகுதியில் துஷ்ட மிருகங்கள் நிறைந்த காடு தொடங்கியது. பேச்சு சுவாரஸ்யத்தில் இருள் சூழ்வதை அவர்கள் கவனிக்கவில்லை. துஷ்ட மிருகங்களின் சப்தங்கள் கேட்ட பின்தான் இருவருக்கும் சூழ்நிலையில் கவனம் திரும்பியது. பணக்காரன் அங்கிருந்த ஒரு படகோட்டியிடம் நூறு ரூபாய் தருவதாகவும் அக்கரை சேர்க்கும்படியும் கேட்டான். சாதாரணமாக ஆற்றைக் கடக்க ஐந்து ரூபாய்தான். படகோட்டி இருட்டி விட்டது என்பதால் படகைச் செலுத்தச் சம்மதிக்கவில்லை. சன்மானத்தை உயர்த்தி, உயர்த்திக் கடைசியில் ஐந்நூறு ரூபாய் என்றதும் படகோட்டி இரு நண்பர்களையும் பத்திரமாக அக்கரை சேர்த்து விட்டான்.

பணக்காரன் தனது துறவி நண்பனை நோக்கி, "என்னிடம் பணம் இருந்ததால்தானே நாம் பத்திரமாக வந்துசேர முடிந்தது!" என்றான்.



துறவி கூறினார்: "நண்பனே, பணம் உன் பாக்கெட்டிலேயே பத்திரமாக இருந்திருந்தால் நாமும் பத்திரமாகத் துஷ்ட மிருகங்களின் வயிற்றில்தான் இருந்திருப்போம். அது வெளியில் வந்ததால்தான் நாமும் வெளியே இருக்கிறோம்!"

ஸ்வாமி பார்த்தசாரதி சொற்பொழிவில்
கேட்ட கதையை எழுதியவர்: லக்ஷ்மி கண்ணன்.

---

"ஆபீஸ்லே இருக்கார்."

"ஓ, இன்னும் ஆபீஸ்லேருந்து வரவில்லையா?"

"வந்துட்டார்டா. நான் சொன்னது விட்டு ஆபீஸ் ரூம். உள்ளே போ" என்றான்.

"அதுக்கு முன்னாடி நீ இந்த இரண்டு கடிதாசுலயும்கையெழுத்துப்போடு" என்று டைப் அடித்த காகிதங்களை நீட்டினேன்.

"என்னடா நீயும் அத்திம்பேர் மாதிரி கரார் பண்றியா?"

"போடேன் சொல்றேன்..." என்று நான் வற்புறுத்த, அக்கா கையெழுத்துப் போட்டாள்.

வீட்டின் ஒதுக்குப்புறமான ஓர் அறையில்தான் அத்திம்பேரின் 'ஆபீஸ்' இருந்தது. அறைக்கு வெளியே அக்காவின் இரண்டாவது பிள்ளை உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"ஏண்டா, படிக்கலையா?"

"உஸ். இன்னைக்கு என் டூட்டி. அப்பாவைப் பார்க்க வந்திங்களா?" என்றான்.

"ஆமாம்."

"விஸிட்டிங் கார்ட் இருக்கா?"

"டேய் நான் உன் மாமாடா!"

"தெரியும் மாமா. ஆனா அப்பாவைப் பார்க்கணும்னா உங்க விஸிட்டிங் கார்டை முன்னாலே அனுப்பணும். ஆபீஸ் வாசல்லே 'ப்யூன்' உட்கார்ந்திருப்பானே, அது போல நான் உட்கார்ந்திருக்கேன். இன்னைக்கு என் 'டூட்டி'"

ஒரு துண்டு காகிதத்தில் பெயரை எழுதிக் கொடுத்தேன். எடுத்துக் கொண்டு உள்ளே சென்றான். ஒரு நிமிடத்தில் வெளியே வந்தான்.

"உட்காருங்க. கூப்பிடுவார்."

இரண்டு நிமிடம் கழித்து 'டிர்ரிங்' என்று பெல்லடித்தது. பையன் உள்ளே சென்று, வெளியே வந்தான்.

"கூப்பிடறார். போங்க."

நான் உள்ளே நுழைந்த பொழுது ஏதோ ஃபைலைக் கட்டிக் கொண்டிருந்தார்.

"என்ன அத்திம்பேர், இது?"

"எது?" என்றார்.

"வீட்டிற்கு வந்து கூட ஆபீஸ் மாதிரி... சரி உங்க கூட கொஞ்சம் பேசணுமே டைம் இருக்கா....?"

"உஸ். நான் ஒரு கண்டிப்பான 'ஆபீஸர்'. வீடாக இருந்தாலும், ஆபீஸாக இருந்தாலும் எதிலேயும் ஒரு ஒழுங்கு, டிஸிப்ளின் தேவை. புரிந்ததா? சரி, இப்ப எதுக்கு வந்திருக்கே? இரண்டு நிமிஷத்துல சொல்லி முடி..."

"இரண்டு நிமிஷத்துல சொல்லி முடிக்கிற விஷயமில்லே இது... அதனால இந்த விண்ணப்பத்தை வாங்கிக்கோங்க" என்றபடி நான் டைப் செய்து அக்காவிடம் கையெழுத்து வாங்கியிருந்த விண்ணப்பத்தை நீட்டினேன்.

அதை வாங்கி உரக்கப் படித்தார்:

ஐயா,

இப்பவும் அதிக வேலைப்பளு காரணமாக, வேலைகளை என்னால் நிரம்படச் செய்ய இயலாமையினால், என்னுடைய வேலையிலிருந்து ஒரு மாதம் தற்காலிக விடுப்பு வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய தம்பி வீட்டில் அக்கா 'வேலை' காலியாக இருப்பதால், ஒரு மாறுதலுக்கு அந்த வேலையை மேற்கொள்ள விரும்புகிறேன். அதற்கு ஆகக்கூடிய போக்குவரத்து மற்றும் இதர செலவுகளுக்கான வவுச்சர் (ரூ. 500க்கு இத்துடன்) இணைத்திருக்கிறேன்.

இப்படிக்கு,
காமாட்சி.

"காமு! ஓடியா ஓடியா! தம்பி வந்திருக்கான் காப்பி கொண்டு வா. இங்கே கொஞ்சம் வந்து உட்கார்ந்து பேசு. அப்புறம் எல்லாருமா காமத்ல போய் ராத்திரி டின்னரை முடிச்சுடலாம்..."

— கூவிய அத்திம்பேர் 'விண்ணப்பத்தை'க் கிழித்துக் குப்பையில் போட்டு விட்டு வழிக்கு வந்தார்!

# புரிந்து கொண்டது எப்போது?

**ஹமீத்கான் — ஹலீலா**
**ஹமீத்கான் சொல்கிறார்:**

எங்கள் கல்யாணத்தின் போது ஹலீலாவுக்குப் பதினாறே வயது. எனக்கு இருபத்தி நாலு. கல்யாணச் சடங்கு முடியும் வரை, எங்கள் மத வழக்கப்படி நான் அவளைப் பார்க்கக் கூட இல்லை.

மனத்துக்குள் ஒரே பயம். காரணம் — எனக்கு அப்போது வருமானம் குறைவு. இரண்டு தங்கைகள், இரண்டு தம்பிகள் என் ஆதரவில் வளர வேண்டும் — எனக்கு வாய்த்திருப்பவளோ ஒரு சிறு பெண். எப்படிச் சமாளிப்பேன்! என் மனைவி என் சகோதர, சகோதரிகளை நல்ல முறையில் ஏற்றுக் கொள்வாளா...?

எங்கள் திருமணம் நடந்த சிறிது காலத்துக்குள் என் தங்கைக்கு மாப்பிள்ளை பார்க்க ஆரம்பித்தோம். அப்போது என் மனைவி நான் செலவுகளைப் பற்றிக் கவலைப்படுவதை அறிந்து, 'அல்லா வழி காட்டுவார். நீங்கள் உங்கள் கடமையைச் செய்யுங்கள்' என்று ஊக்கப்படுத்தினாள்.

கல்யாணம் நிச்சயமும் ஆகி விட்டது. ஆனால் எவ்வளவு அலைந்து திரிந்தும் தேவையான பணம் புரட்ட முடியவில்லை. மாப்பிள்ளை வீட்டாரிடம் சொன்னபடி மணப் பெண்ணுக்கு நகைகள் போட முடியாத நிலை. என் முகத்திலிருந்த வாட்டத்தைக் கண்ட என் மனைவி ரொம்பவும் ஆறுதல் சொன்னாள். அது போதாதென்று தன் நகைகளைக் கழற்றி என் தங்கைக்குப் போடச் சொல்லிக் கொடுத்து விட்டாள்!

நான் அதிர்ந்து போனேன். என் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்ட அவள், ''உங்களால் சொன்ன சொல்லைக் காப்பாற்ற முடியாவிட்டால் அந்த அவப்பெயர்





* சீனிவாசன் — சுகந்தி

[illegible] அதனால் இந்த நகைகளைப் போட்டுக் கல்யாணத்தை நிச்சயித்தபடி நடத்தி விடுங்கள்'' என்றாள்.

அந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவள் வயதில் சின்னவளாயிருந்தாலும் எவ்வளவு விவேகி என்பதைப் புரிந்து கொண்டேன். அவளைப் பற்றி நான் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன்; ஆனால் அவளோ வெகு சுலபமாக எங்கள் குடும்பத்தில் ஒன்றி யிருந்தாள்!

மற்றொரு தங்கையையும் இரண்டு தம்பிகளையும் ஆளாக்குவதிலும் ஊர்மிளா பெரிதும் உதவினாள். ஆனால் அந்த முதல் சந்தர்ப்பம்தான் அவள் குணத்தையும் உள்ளத்தையும் எனக்கு உணர்த்தியது.

**சீனிவாசன் — சுகந்தி**
**சுகந்தி பேசுகிறார்:**

என் அப்பா பல குக்கிராமங்களில் (ரயில்வே) பணியாற்றியதால் நான் முற்றிலும் கிராமச் சூழ்நிலையில்தான் வளர்ந்தேன். ஆனால் எனக்குப் பார்த்திருந்த மாப்பிள்ளையோ பம்பாயில் பிறந்து, வளர்ந்து, பணியாற்றியவர். நாகரிக வழக்கங்களில் ஊறிப் போன அவருடன் எப்படி இசைவாகக் குடித்தனம் நடத்துவது என்று பயந்தேன்.

எங்கள் கல்யாணம் மதுரையில் நடந்து முடிந்த கையோடு எங்கள் கிராமத்துக்குச் சென்றோம். கிராமம் என்றால் — சரியான கிராமம்! கழிப்பறை வசதி கூடக் கிடையாது! இந்த மனிதர் எப்படிச் சமாளிப்பார் என்று நான் கவலையுடன் இருந்த அதிகாலை வேளையில், அவர் சொம்பில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வயல்காட்டுக்கு ஒதுங்கப் போய்விட்டார்! என் தம்பியோடு ஆற்றங்கரைக்குப் போய்க் குளித்தார்; திரும்பி வந்து தரையில் உட்கார்ந்து சாப்பிட்டு, ஊர்ப் பையன்களுடன் சடுகுடு விளையாடி, மாலை எங்கள் எல்லோரையும் டூரிங் டாக்கீஸ் அழைத்துப் போய்....

எல்லோரும் மாப்பிள்ளையை வானளா



* ரமேஷ் — சோபனா



## அருள்வாக்கு

ஸ்திரீகளுக்குத் தாமாக யக்ஞம் பண்ண அதிகாரமில்லை என்பதை மட்டும் பார்த்து ஆக்ஷேபணை பண்ணுகிறவர்கள், பத்தினி இல்லாத புருஷனுக்கு யக்ஞம் செய்கிற அதிகாரமில்லை என்கிற விஷயத்தையும் கவனித்தால், ஹிந்து சாஸ்திரம் பெண்களை மட்டம் தட்டுகிறது என்று சொல்ல மாட்டார்கள். பத்தினி உள்ளவன்தான் யக்ஞம் செய்ய வேண்டும்; அப்படிப்பட்ட யக்ஞ கர்மாநுஷ்டானத்தை இவன் லோக க்ஷேமத்துக்காகவும் தன் சித்த சுத்திக்காகவும் ஆரம்பிக்க வேண்டும் என்றேதான் பிரம்மசர்ய ஆசிரமம் முடிந்து ஸமாவர்த்தனம் ஆனபின் விவாஹம் என்கிற ஸம்ஸ்காரத்தை வைத்திருக்கிறது.

விவாஹத்துக்கு "ஸஹதர்ம சாரிணி ஸம்பிரயோகம்" என்று பேர். அதாவது 'தன்னோடு கூட தர்மத்தை நடத்திக் காட்டுகிறவளோடு பெறுகிற உத்தமமான சேர்க்கை' என்று அர்த்தம். அதாவது, இந்திரிய ஸுகம் இதில் முக்கிய லக்ஷியமல்ல; லோகத்தில் தர்மங்களை அநுஷ்டிப்பதுதான் லக்ஷியம். அதைத் தனியாக அநுஷ்டிக்கச் சொல்லவில்லை. அதற்குத் துணையாக ஒரு ஸ்திரீயைச் சேர்த்துக் கொள்ளும்படி சாஸ்திரம் சொல்கிறது. 'தர்ம பத்தினி' 'ஸஹதர்மசாரிணி' என்பதாகப் பெண்டாட்டியைத் தர்மத்தோடு ஸம்பந்தப்படுத்தித்தான் சொல்லியிருக்கிறதே தவிர, காமத்தோடு அல்ல. இதிலிருந்து சாஸ்திரங்களில் ஸ்திரீகளுக்குக் கொடுத்துள்ள உயர்ந்த மதிப்பைப் புரிந்து கொள்ளலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வப் புகழ ஆரம்பித்து விட்டனர். தனிமையில் அவரிடம் கேட்டேன். "எப்படி உங்களால் அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ள முடிந்தது?"

"இருக்கிற இடத்துக்கேற்ற மாதிரி மற்றவங்க மனசு நோகாம நடந்துக்கிறதுதானே நமக்கும் நல்லது, மத்தவங்களுக்கும் நல்லது" என்றார்.

அவர் அன்று சொன்ன இந்த வார்த்தைகள்தான் பம்பாய் வாழ்க்கைக்கு அட்ஜஸ்ட் செய்து கொள்ள எனக்கு வழிகாட்டியதோடு அவரைப் பற்றிய பயம், சந்தேகம் போன்றவற்றைப் போக்கி அவரைப் புரிந்து கொள்ள உதவின.

### ரமேஷ் ஷோபனா (அட்டையில்) ஷோபனா கூறுகிறார்:

நாங்கள் காதலித்து, குடும்ப எதிர்ப்பை வென்று திருமணம் செய்து கொண்டவர்கள். கணவருக்குத் தொழிற்சாலையில் பொறுப்பான வேலை. எனக்கோ டிராவல் நிறுவனத்தில் வேலை — தொழிலுக்கு நேரம் காலம் கிடையாது. தவிர மாதத்தில் பாதி நாட்கள் பயணிகளைச் சிங்கப்பூர், மலேசியா என்று அழைத்துச் செல்ல வேண்டிய வேலை. இந்த மின்னல் வேக வாழ்க்கையினிடையே மகன் பிறந்து பள்ளிக்குப் போக ஆரம்பித்தான். ஆனால் அவன் படிப்பைக் கவனிக்க எங்கள் இருவருக்கும் நேரமில்லை. பள்ளியிலிருந்து கண்டன லெட்டர் வந்து விட்டது! இந்தப் பிரச்னையை என் கணவரும் நானும் அலசப் போய் அது வாக்குவாதமாக மாறி, அனல் பறக்க ஆரம்பித்தது.

இறுதியில் அவர் சொன்னார் — "இந்தப் பிரச்னைக்காக நீ வேலையை விட்டு விட வேண்டாம்! வாரத்தில் மூன்று நாட்கள் அர்ஜுனுக்கு நான் பாடம் சொல்லிக் கொடுக்கிறேன். மூன்று நாட்கள் அந்தப் பொறுப்பு உன்னுடையதாக இருக்கும். எக்காரணம் கொண்டும் இதில் மாற்றம் கூடாது. இன்னும் மூன்றே மாதங்களில் அர்ஜுன் முன்னேறி விடுவான்."

அவர் சொன்னபடி செய்து பார்த்தோம். இப்போது அர்ஜுன் நன்றாகப் படிக்கிறான்.

என் கணவரைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருந்தாலும் இந்த சம்பவத்தின் போது ஏற்பட்ட வாதப் பிரதிவாதங்கள் அவரை ஒரு புதிய கோணத்தில் எனக்கு உணர்த்தின. சிக்கல்களை அணுகி விடுவிக்கும் முயற்சியில் எதிராளியின் மன உணர்வுகளுக்கு எவ்வளவு மதிப்புக் கொடுக்கிறார் என்று புரிந்து கொண்டேன்.

பேட்டி: **ப்ரியன்**

அட்டை, மற்றும் கட்டுரைக்கான வண்ணப்படங்கள்: **உத்ரா**

Mafatlal Fashion Spreads!



# Presenting the one-stop shopping spree for you.

**TRENDZ**
THE *Mafatlal* FASHION STORE

Announcing TRENDZ — the Mafatlal Fashion Store.
A new fashion fabric shopping experience.
With the complete Mafatlal range of high quality fabrics in the latest designs and textures.
Choose from: Suitings & Shirtings. Worsted Suitings. Ready-to-wear Shirts & Trousers.
Young Sensations Dress Materials and Sarees. Dreamz bed fashions which include bed sheet sets, sheets and pillow cases. Also Corduroys, Rubias, Dhotis — and more!

Mafatlal Fabrics

**TRENDZ**
THE *Mafatlal* FASHION STORE

# சிவகாமியின் சபதம்



## ஐந்தாம் அத்தியாயம்

## காதற் புயல்

சிற்ப வீட்டின் வாசலில் வந்து நின்ற சிவகாமியைக் கண்டதும், பரஞ்சோதியின் கண்கள் அவளை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தரையை நோக்கின. ஆயனச் சிற்பியின் மகள் சாதாரண மானிடப் பெண் அல்ல, – தெய்வாம்சம் உடையவள் என்ற எண்ணம் முதன் முதலில் அந்த வீட்டுக்கு வந்திருந்த போது பரஞ்சோதியின் உள்ளத்தில் தோன்றியிருந்தது. சிவகாமிக்கும் மாமல்லருக்கும் ஏற்பட்டிருந்த இருதய பாசத்தைப் பற்றி முன்பே அவர் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டிருந்தார். நேற்றிரவு பல்லவ குமாரரின் வாய்மொழியினாலேயே அது உறுதிப்பட்டது.

அரண்மனை நிலா மாடத்தில் சரத்கால சந்திரனின் அமுதகிரண போதையை அனுபவித்துக் கொண்டு, சிநேகிதர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த போது, மாமல்லர் தம்முடைய இருதயத்தையே அவருக்குத் திறந்து காட்டி விட்டார். இத்தனை நாளும் மாமல்லரின் உள்ளத்தில் அணை போட்டுத் தடுத்து வைத்திருந்த பிரேமைப் பிரவாகமானது அவருடைய இருதய அந்தரங்கத்தை வெளியிடக்கூடிய உற்ற தோழன் ஒருவன் கிடைத்த உடனே, அணையை ஒரே மோதலில் இடித்துத் தள்ளி விட்டு அமோக வெள்ளமாகப் பாய்ந்தது. பரஞ்சோதி அந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திக்குமுக்காடிப் போனார். இந்த மாதிரி காதல் வெறி அவருக்கு முற்றிலும் புதுமையாயிருந்தது. திருவெண்காட்டில் நமசிவாய வைத்தியர் வீட்டில் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த நங்கை ஒருத்தியும் இருக்கத்தான் இருந்தாள். ஆனால், அவளுடைய நினைவானது பரஞ்சோதிக்கு அமைதி கலந்த இன்பத்தையே உண்டாக்கியது. மாமல்லருடைய காதலோ அவருடைய உள்ளத்தை, கடும் புயல் சுழன்று சுழன்று அடிக்கும் மலை சூழ்ந்த பிரதேசமாகவும், திடீர் திடீர் என்று தீயையும் புகையையும் கக்கும் எரிமலையாகவும், பிரம்மாண்டமான அலைகள் மலை மலையாக எழுந்து மோதும் குடாக் கடலாகவும் செய்திருப்பதைப் பரஞ்சோதி கண்டார்.

மாமல்லருடைய காதல் வேகம் பரஞ்சோதிக்குப் பெருவியப்பை உண்டாக்கிற்று; அதோடு, பயத்தையும் உண்டாக்கிற்று.

அவர்களுடைய காதல் பூர்த்தியாவதற்கு எத்தனை எத்தனை தடைகள் இருக்கின்றன என்பதை எண்ணிய போது பரஞ்சோதியின் மனம் கனிந்தது. எல்லாவற்றிலும் பெரிய தடை, மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பம் வேறுவிதமாயிருந்ததேயாகும். அந்தப் பெருந் தடைக்குப் பரிகாரம் உண்டா? அது எப்போதாவது நிவர்த்தியாகக் கூடுமா?

**அமரர் கல்கி**

சென்ற எட்டு மாதத்தில் சக்கரவர்த்தியிடம் நெருங்கிப் பழகி, அவருடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகி, அநேக விஷயங்களில் அவருடைய அந்தரங்கக் கருத்துக்களையெல்லாம் அறிந்திருந்த பரஞ்சோதி, மாமல்லரின் காதலைப் பற்றிச் சக்கரவர்த்திக்குத் தெரியுமென்றும் அதை அவர் விரும்பவில்லையென்றும் திட்டமாய்த் தெரிந்து கொண்டிருந்தார்.

எனவே, இப்போது அவருடைய நிலைமை மிகவும் தர்மசங்கடமாய்ப் போயிருந்தது. ஒரு பக்கத்தில், அவருடைய மனப்பூர்வமான பக்திக்குப் பாத்திரமானவரும், தந்தையின் ஸ்தானத்தை வகிப்பவருமான மகேந்திரர், குமார சக்கரவர்த்தியின் உள்ளத்தைச் சிவகாமியிடமிருந்து திருப்ப விரும்புகிறார் என்பதை அவர் அறிந்திருந்தார். மாமல்லரோ, தம்முடைய இருதய அந்தரங்கத்தையெல்லாம் வெளியிடுவதற்குரிய உற்ற துணைவராக அவரைப் பாவித்து, தம் மனோரதத்தை நிறைவேற்றிக் கொடுப்பதற்கு அவருடைய ஒத்தாசையை எதிர்பார்க்கிறார். சக்கரவர்த்திக்கு உகந்ததைச் செய்தால், தம்மை நம்பிய சிநேகிதருக்குத் துரோகம் செய்வதாகும். சிநேகிதருக்கு உகந்ததைச் செய்தாலோ சக்கரவர்த்திக்கு விருப்பமில்லாததைச் செய்ததாக முடியும்.

இந்தத் தர்ம சங்கடம் ஒருபுறமிருக்க, சிவகாமியின் நிலைமை என்ன? அவளுக்கு நன்மையானது எது? இந்தப் பொருத்தமில்லாத காதலினால், அவளுக்கு உண்மையில் நன்மை உண்டாகுமா? இது விஷயத்தில், ஆயனருடைய அபிப்பிராயந்தான் என்ன?

இத்தனை மனக் குழப்பங்களுக்கிடையே ஒன்று மட்டும் மிகத் தெளிவாயிருந்தது. சிவகாமி என்று எண்ணியதுமே, அவருடைய மனத்தில் பயபக்தியும் மரியாதையும் அன்பும் அபிமானமும் சங்கோசமும் வாத்ஸல்யமும் கலந்த புனிதமான தெய்வீக உணர்ச்சி தோன்றிற்று. சிவகாமி விஷயத்தில் அவருடைய மன நிலைமைக்குத் தகுந்த உதாரணம் சொல்ல வேண்டுமானால், சீதாதேவி விஷயத்தில் லக்ஷ்மணனுடைய மன நிலைமையைத்தான் சொல்ல வேண்டும்.

ரதத்தில் இருந்தது மாமல்லர் அல்ல என்று கண்டதும், வருகிறவர்கள் வேறு யார் என்று தெரிந்து கொள்ளக் கூடச் சிவகாமி ஆசைப்படவில்லை. உடனே அவளுடைய கவனம் ரதத்தை ஓட்டிக் கொண்டு வந்த கண்ணபிரான் மீது சென்றது.

கண்ணபிரான் ரதத்தின் முகப்புத் தட்டிலிருந்து குதித்து முன்னால் வர, பரஞ்சோதி அவனைத் தொடர்ந்து பின்னால் வந்தார். அவர்கள் நெருங்கி வந்ததும், சிவகாமி கண்ணபிரானை நோக்கி, "அண்ணா! வீட்டில் எல்லாரும் சௌக்கியமா?" என்று கேட்டாள். அவளுடைய குரலில் தீனமும் ஏமாற்றமும் நன்கு தொனித்தன.

"இல்லை, தாயே! இல்லை! வீட்டில் ஒருவரும் சௌக்கியம் இல்லை. கமலிக்குத் தலைவலி, அப்பாவுக்கு முழங்கால் வலி, எனக்கும் உடம்பு சரியாகவே இல்லை...."

"உங்களுக்கு என்ன அண்ணா?" என்று சிவகாமி கேட்டாள்.

"அதுதான் தெரியவில்லை. வயிற்றில் ஏதோ கோளாறு. கமலி, 'உன் வியாதிக்கு மருந்து பூனைதான்!' என்கிறாள்."

"பூனை மருந்தா? இது என்ன கூத்து?" என்றாள் சிவகாமி.

"ஆமாம், தாயே! இப்போதெல்லாம் எனக்கு அசாத்தியமாகப் பசிக்கிறது. நேற்று ராத்திரி கமலி சுட்டு வைத்திருந்த ஒன்பது அப்பம், ஏழு தோசை, பன்னிரண்டு கொழுக்கட்டை அவ்வளவையும் தின்று விட்டு, 'இன்னும் ஏதாவது இருக்கிறதா கமலி!' என்று கேட்டேன். 'உன் வயிற்றில் எலி இருக்கிறது; ஒரு பூனையைச் சாப்பிடு, அப்போதுதான் உன் பசி தீரும் என்றாள்!'"

இதைக் கேட்ட சிவகாமி 'கலீ'ரென்று சிரித்தாள். பரஞ்சோதியினாலும் சிரிக்காமலிருக்க முடியவில்லை.

பரஞ்சோதியின் சிரிப்புச் சப்தத்தைக் கேட்ட சிவகாமி அவர் பக்கம் திரும்பிப் பார்த்தாள். ஆஹா! இது யார்?

பரஞ்சோதி தைரியமடைந்து, "அம்மணி! என்னைத் தெரியவில்லையா?" என்று கேட்டார்.

"யார்? திருவெண்காட்டிலிருந்து..."

"ஆம் நான்தான்! திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து அப்பாவுக்கு ஓலை கொண்டு வந்த பரஞ்சோதிதான்...."

அப்போது, கண்ணபிரான் குறுக்கிட்டு, "மன்னிக்க வேண்டும்! கல்யாணச் சந்தடியில் மாப்பிள்ளையை மறந்து போனேன், தாயே! இவர் யார் என்று நான் சொல்கிறேன். காஞ்சிக் கோட்டையின் பிரதம தளபதி இவர். கோட்டைக் காவலுக்காகச் சக்கரவர்த்தியே இவரை அனுப்பியிருக்கிறார். இனிமேல் காஞ்சிக் கோட்டையைப் போல் ஒளிந்து கொள்வதற்குப் பத்திரமான

இடம் பூலோகத்திலேயே கிடையாது. இவருடைய கட்டளை இல்லாமல் யமன் கூட இனிமேல் கோட்டைக்குள் நுழைய முடியாது!'' என்றான்.

கண்ணபிரான் ஒரு மாதிரி விதூஷகன். இந்த மாதிரியெல்லாம் மாமல்லரிடமே பேசுவதற்கு உரிமை பெற்றவன் — என்று பரஞ்சோதி அறிந்திருந்தார். எனவே, அவனுடைய பேச்சைப் பொருட்படுத்தாமல், சிவகாமியை நோக்கி, ''அப்பா எங்கே? உள்ளே இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

கண்ணபிரானுடைய வேடிக்கைப் பேச்சு அந்தச் சமயம் சிவகாமிக்கும் பிடிக்கவில்லை என்று அவளுடைய முகக் குறி காட்டிற்று. ''அப்பா அதோ வருகிறார்!'' என்றாள்.

பரஞ்சோதி திரும்பிப் பார்த்தார். ஆயனர் மரத்தடியிலிருந்து வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

அவர் அருகில் வந்ததும் தளபதி பரஞ்சோதி, ''ஐயா! என்னை அடையாளம் தெரிகிறதா?'' என்று கேட்டார்.

உடனே ஆயனர் ஆவலுடன், ''யார்? பரஞ்சோதியா?'' என்று விரைந்து வந்து அவரைத் தழுவிக் கொண்டார். பிறகு, சற்றுத் தாழ்ந்த குரலில், ''தம்பி! போன காரியம் எப்படி? காயா, பழமா?'' என்று கேட்டார்.

அப்போது அவருடைய கண்களில் தோன்றிய வெறியையும், குரலில் தொனித்த பரபரப்பையும் கவனித்த பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் துளித்தது. தழுதழுத்த மெல்லிய குரலில், ''இந்தத் தடவை காரியம் ஜயமாகவில்லை. வெறுங்கையுடனேதான் திரும்பி வந்திருக்கிறேன். ஆனால், என்றைக் காவது ஒரு நாள் நிச்சயமாக அஜந்தா இரகசியத்தை அறிந்து வந்து உங்களுக்குத் தெரிவிப்பேன்'' என்று கூறினார்.

''வேண்டாம், தம்பி! வேண்டாம். நீ வழியில் பல்லவ சைனியத்தில் சேர்ந்து விட்டதாக நானும் கேள்விப்பட்டேன். ஒரு வேளை பொய்யாயிருக்குமோ என்று நினைத்தேன். அதனால் பாதகமில்லை. என்றும் அழியா வர்ண இரகசியத்தை நானே சீக்கிரத்தில் கண்டுபிடித்து விடுவேன். தம்பி! சில புதிய சோதனைகள் செய்து கொண்டிருக்கிறேன். வருகிறாயா காட்டுகிறேன்!'' என்று ஆயனர் தாம் உட்கார்ந்திருந்த மரத்தடியை நோக்கினார்.

இதற்குள், சிவகாமி, ''அப்பா! அண்ணன் எட்டு மாதங்கள் கழித்து வந்திருக்கிறார். உள்ளே வந்து உட்காரச் சொல்லுங்கள். எல்லாம் விவரமாகக் கேட்கலாம்'' என்றாள்.

''ஆமாம், ஆமாம்! வா, தம்பி!'' என்று கூறி, ஆயனர் பரஞ்சோதியை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.

## ஆறாம் அத்தியாயம்

# கலை வெறி

ஆயனர் வீட்டுச் சிற்ப மண்டபமானது கிட்டத்தட்டத் தாம் எட்டு மாதத்துக்கு முன்பு பார்த்தது போலவே இருப்பதையும், ஆயனர் அப்போது அரைகுறையாக வேலை செய்து விட்டிருந்த சிலைகள் இன்னும் அரைகுறையாகவே இருப்பதையும் பரஞ்சோதி பார்த்த போது, அவருடைய மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஒரு சோர்வு உண்டாயிற்று. ''இந்த யுத்தம் எனத்திற்காக வந்தது?'' என்ற எண்ணமும் அவருடைய வீர உள்ளத்தில் தோன்றியது. தாழ்வாரத்தின் முனையில் ஆயனரும் பரஞ்சோதியும், உட்கார்ந்திருந்தார்கள். சிவகாமி முன்னொரு சமயம் நின்றது போலவே இப்போதும் அருகிலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

''உங்களுக்குத் தெரியுமா, அப்பா! இவர் தான் இப்போது காஞ்சிக் கோட்டையின் தளபதி!'' என்றாள் சிவகாமி.

''அப்படியா! தம்பியின் முகக் களையைப் பார்த்து, இவன் பெரிய பதவிக்கு வருவான் என்று அப்பொழுதே நாகநந்தியடிகள் சொன்னார்...'' என்று கூறிய ஆயனர், சட்டென்று நினைத்துக் கொண்டு, ''தம்பி! ஓலையை என்ன செய்தாய்?'' என்று கேட்டார்.

''ஐயா, அது விஷயத்திலேதான் ஏமாந்து போய் விட்டேன். தாங்களும் நாகநந்தியும் எவ்வளவோ எச்சரித்திருந்தும் பயனில்லாமல் போய் விட்டது. ஓலை....''

''அடாடா! அதைச் சக்கரவர்த்தியிடம்....''

''ஆம் ஐயா! ஓலை சக்கரவர்த்தியிடம் சிக்கி விட்டது.''

''ஆஹா!'' என்றார் ஆயனர். பிறகு, ''மகேந்திரவர்மர் அதைப் பற்றி என்ன சொன்னார்?'' என்று கேட்டார்.

''மகேந்திரவர்மரா? நான் பல்லவ சக்கரவர்த்தியைச் சொல்லவில்லையே; வாதாபி

சக்கரவர்த்தியையல்லவா சொன்னேன்? வழியில் என்னை வாதாபி வீரர்கள் பிடித்துக் கொண்டு போய்ப் புலிகேசியின் முன்னால் நிறுத்தினார்கள். ஓலையையும் அவர்கள்தான் பலாத்காரமாய்க் கைப்பற்றிக் கொண்டார்கள்....''

ஆயனர் வாயிலிருந்து மீண்டும், 'ஆ!' என்னும் வியப்பொலி எழுந்தது. அதே சமயத்தில் எங்கேயோ, யாரோ, பெருமூச்சு விடுவது போல் சப்தம் கேட்டது.

பாம்பின் சீறல் போன்ற அந்தச் சப்தத்தைப் பரஞ்சோதி கவனித்தார். ஆனால், ஆயனராவது சிவகாமியாவது கவனிக்கவில்லை.

சிவகாமி அப்போது வாசற் பக்கத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அங்கே உள் வாசற்படியண்டை நின்ற கண்ணபிரான் சிவகாமியை நோக்கி ஏதோ சமிக்ஞை செய்து கொண்டிருந்தான்.

''தம்பி! உண்மையாகவே நீ வாதாபி புலிகேசி சக்கரவர்த்தியைப் பார்த்தாயா?'' என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

''ஆம், ஐயா! அதோ, அந்த புத்த விக்கிரகம் உள்ள தூரத்தில் வாதாபி சக்கரவர்த்தி இருந்தார்...''

''சக்கரவர்த்தி என்ன சொன்னார்?''

''யாருக்குத் தெரியும்? நான் அறியாத பாஷையில் அவர் பேசினார்... தங்களுக்கு இருக்கும் ஆவலைப் பார்த்தால், வாதாபி சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்புவதாய்த் தோன்றுகிறதே!''

''ஆம், தம்பி! உன்னை அனுப்பாமல், நானே ஓலையை எடுத்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா என்று கூடத் தோன்றுகிறது!''

''ஏன் அவ்வளவு ஆர்வம், ஐயா?''

''வாதாபி சக்கரவர்த்தி இளம்பிராயத்தில் அஜந்தா மலையில் இரண்டு வருஷம் இருந்தாராம். ஆகையால் அவருக்கு அஜந்தா வர்ணத்தின் இரகசியம் தெரிந்திருக்குமல்லவா?''

வஜ்ரபாஹு கலைகளை இகழ்ந்து கூறியதெல்லாம் பரஞ்சோதிக்கு அப்போது நினைவு வந்தது. அது எவ்வளவு உண்மை? ஆயனரின் கலை வெறி அவரை எப்படிப் பைத்தியமாக அடித்திருக்கிறது? புலிகேசி பகை அரசன் என்பதைக் கூட மறந்து அவனைப் பார்க்கும் ஆவலை உண்டாக்கியிருக்கிறதல்லவா?''

''ஐயா! நான் முக்கியமாக எதற்காக வந்தேனோ, அந்தக் காரியத்தை இன்னும் சொல்லவில்லை. சக்கரவர்த்தி தங்களிடம் ஒரு செய்தி தெரிவிக்கச் சொல்லி எனக்கு ஆக்ஞாபித்தார்...''

''எந்தச் சக்கரவர்த்தி?'' என்றார் ஆயனர்.

''மகேந்திர பல்லவர்தான்!''

''ஆ! மகேந்திர பல்லவர்! அவரைப் பற்றி நான் என்னவெல்லாமோ நினைத்திருந்தேன். ஒரு சமயம் இந்தப் பல்லவ இராஜ்யத்திலுள்ள சிற்பிகள் எல்லாம் சேர்ந்து சபை கூடி மகேந்திர பல்லவருக்கு 'விசித்திர சித்தர்' என்று பட்டம் கொடுத்தோம். அதைக் காட்டிலும் 'சபல சித்தர்' என்று அவருக்குப் பெயர் கொடுத்திருக்கலாம்.''

''ஏன் இப்படிச் சொல்கிறீர்கள், ஐயா?''

''பார், தம்பி! இங்கிருந்து என்னை மாமல்லபுரத்துக்குப் போகச் சொன்னார். 'ஐந்து மலைக் கோயில்களும் ஆறு மாதத்தில் முடிய வேண்டும்' என்றார். ஒரு மாதத்திற்குள்ளாக, 'கோயில் வேலையை நிறுத்து!' என்று கட்டளையிட்டார். சக்கரவர்த்தி முன்போல் இல்லை, தம்பி; ரொம்பவும் மாறிப் போய் விட்டார்!''

''அப்படியொன்றும் அவர் மாறவில்லை ஐயா! யுத்தம் காரணமாகச் சிற்சில காரியங்கள் செய்ய வேண்டியிருக்கிறது....''

''யுத்தம்! பாழும் யுத்தம்! இப்போது நடக்கிற யுத்தம் போதாதென்று பழைய பாரத யுத்தத்தை வேறே கட்டிக் கொண்டு அழ வேண்டுமாம். ஒவ்வொரு ஊரிலும் பாரத மண்டபங்கள் கட்ட வேண்டுமாம். நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா, தம்பி! உண்மையில் மாமல்லபுரத்துச் சிற்ப வேலையைச் சக்கரவர்த்தி நிறுத்தியது பாரத மண்டபம் கட்டுவதற்காக அல்ல, சிற்பிகளுக்கும் சிற்றாள்களுக்கும் படி கொடுத்து வந்த அரிசி, பருப்பு, மிச்சமாகட்டும் என்றுதான்! துறைமுகப் பண்டகசாலைகளில் இருந்த அவ்வளவு தானியங்களையும் காஞ்சிக்குக் கொண்டு போய் விட்டார்களாம்!''

''யுத்தம் நடத்துவதற்கு இவையெல்லாம் அவசியமான காரியங்கள், ஐயா! காஞ்சிக் கோட்டை ஒரு வருஷமோ, இரண்டு வருஷமோ கூட முற்றுகைக்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியம் திரண்டு வருவதை நீங்கள் மட்டும் பார்த்திருந்தால்....''

''வாதாபி சைனியம் வருகிறது, வருகிறது என்று எட்டு மாதமாய்த்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!''.....

''ஆனால், இன்னும் ஏன் அந்தப் பிரம்மாண்டமான சைனியம் இங்கே வந்து சேரவில்லை, தெரியுமா? மகேந்திர பல்லவர் மட்டும் அப்போது போர்க்களத்துக்குப் போயிராவிட்டால், இதற்குள் காஞ்சிமாநகர் இருந்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும், ஐயா! வாதாபி சைனியத்தில் வரிசை வரிசையாக, மலை மலையாக, நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் நின்ற ஆயிரக்கணக்கான

போர் யானைகளை என் கண்ணாலேயே நான் பார்த்தேன். பல்லவ சைனியத்திலோ மொத்தம் நூறு யானைகளுக்கு மேல் கிடையாது. அப்படியிருந்தும் எட்டு மாத காலம் வாதாபி சைனியத்தை வடபெண்ணைக் கரையிலேயே நிறுத்தி வைத்திருந்தோம். இது எதனால் சாத்தியமாயிற்று, தெரியுமா? பாரத யுத்தத்தில் பஞ்சபாண்டவர்களின் வெற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அறிவு பலத்தினாலும் அர்ச்சுனனுடைய வில்லின் வீரத்தினாலும் சாத்தியமாயிற்று. இந்த நாளில் கிருஷ்ண பகவானும் அர்ச்சுனனும் ஒரே உடம்பில் மகேந்திர பல்லவராக அவதரித்திருக்கிறார்கள், ஐயா!''

''தம்பி! சக்கரவர்த்தியிடம் உன்னுடைய பக்தியைக் குறித்து மிகவும் சந்தோஷம். எனக்குச் சக்கரவர்த்தி என்ன சொல்லி அனுப்பினார்? அதைச் சொல்லு!'' என்று ஆயனர் கேட்க, பரஞ்சோதி கூறினார்:

''புலிகேசியின் படைகள் வடபெண்ணையைக் கடந்து விட்டன ஐயா! வேங்கியை வென்ற புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் படைகளும் சேர்ந்து கொண்டிருக்கின்றன. இனி, அவற்றை வெகுகாலம் தடுத்து நிறுத்துவது அசாத்தியம்! ஆகையினால்தான், காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்ய என்னைச் சக்கரவர்த்தி அனுப்பி வைத்தார். ஒரு வருஷமோ இரண்டு வருஷமோ முற்றுகை நீடித்திருக்கலாம். ஆகையால், கோட்டைக்குள்ளிருந்து அநாவசியமான ஜனங்களையெல்லாம் வெளியேற்றப் போகிறோம். கோட்டையைச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் ஜனங்கள் வெளியேறும்படி இருக்கும். இது பற்றித்தான் தங்களுடைய விருப்பத்தைத் தெரிந்து கொள்ளும்படி சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டார். எதிரி சைனியம் வரும் சமயம் தாங்கள் இங்கே இருப்பது உசிதமாயிராது....''

''ஆஹா! இந்த அரண்ய வீட்டிலேயிருந்தும் சக்கரவர்த்தி என்னைத் துரத்தி விடப் பார்க்கிறாரா? எந்த ராஜா எந்தப் பட்டணத்துக்கு வந்தாலென்ன, போனாலென்ன? இந்தக் காட்டுக்குள்ளே வந்து என்னை யார் எட்டிப் பார்க்கப் போகிறார்கள்? பார்த்தால்தான் இங்கிருந்து என்னத்தை எடுத்துக் கொண்டு போகப் போகிறார்கள்? இந்தக் கற்சிலைகளையும் கல்லுளிகளையும் வேணுமானால் கொண்டு போகட்டும். சுவரிலே எழுதிய சித்திரங்களை வேணுமானாலும் சுரண்டிக் கொண்டு போகட்டும்!.....

''ஐயா! தாங்கள் ஏதோ கோபத்தில் பேசுகிறீர்கள். பல்லவ இராஜ்யத்துக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்திருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளாமல் பேசுகிறீர்கள்....''

''சக்கரவர்த்தி எங்களுக்கு என்னதான் கட்டளையிடுகிறார்?''

''தாங்களும் தங்கள் குமாரியும் காஞ்சிக் கோட்டைக்குள்ளேயே வந்து இருந்தாலும் இருக்கலாம்! அல்லது சோழ நாட்டுக்குப் போய்த் தங்கள் சிநேகிதர் நமச்சிவாய வைத்தியருடன் சிலகாலம் தங்கியிருந்தாலும் இருக்கலாம். திருவெண்காட்டுக்குப் போவதாயிருந்தால், தக்க பாதுகாப்புடன் தங்களை அனுப்பி வைக்கும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். தங்கள் விருப்பம் எதுவோ, அப்படிச் செய்யலாம்'' என்றார் பரஞ்சோதி.

''சிவகாமி! நீ என்ன அம்மா சொல்லுகிறாய்?'' என்று கேட்டார் ஆயனர், திரும்பிப் பார்த்து.

ஆனால், சிவகாமி நின்ற இடத்தில் அவளைக் காணவில்லை.

(தொடரும்)

---

பிரசவம் ஆகி இரண்டு, மூன்று நாட்களுக்குத் தாய்ப்பால் நன்கு சுரக்காமல் நீர் போல இருக்கும். இதற்கு



'கொலோஸ்ட்ரம்' (colostrum) என்று பெயர். இந்தத் திரவத்தைக் குழந்தை சாப்பிடக் கூடாது என்று சிலர் தடுக்கிறார்கள். இதில் எவ்வளவு அரிய சத்துக்களும் நோய்த் தடுப்புச் சக்தியும் அடங்கியுள்ளன என்பது தாய்மார்களுக்குத் தெரிவதில்லை. குழந்தை தாயின் மார்பிலிருந்து இத்திரவத்தை உறிஞ்சும் பொழுது, தாய்க்கு இயல்பான பால் முழு வேகத்தில் சுரக்கத் தொடங்குகிறது. பசு, எருமை மாடுகளுக்குக் கூட இத்திரவம் சுரப்பதுண்டு. இதிலும் சத்துப் பொருள்கள் உண்டு. ஆனால் ஒரு நெடி அடிக்கும். இதன் காரணமாக, இது அசுத்தமானது என்று கருதி ஒதுக்க வேண்டாம்.

— 'உங்கள் உணவும் நீங்களும்' என்ற நூலிலிருந்து.

சைதை ஆர். முரளி.

## "பணக்காரனாக இருந்தால்தான் சொந்த வீடு வாங்க முடியுமென நினைத்தேன்"

## "ஹோம் லோன் அக்கவுண்ட் திட்டம் பற்றிக் கேள்விப்படும்வரை"

ஆம்! அவரைப் போல நீங்களும் "ஹோம் லோன் அக்கவுண்ட்" திட்டத்தின் மூலம் ஒரு வீட்டிற்குச் சொந்தக்காரர் ஆகலாம். இன்று உங்களிடம் போதிய பணம் இல்லாவிட்டாலும் கூட.

கடன் வசதி இணைந்த இச்சிறப்பு சேமிப்புத் திட்டம், நீங்கள் வீடு வாங்க கடன் பெற வசதி செய்கிறது. உங்களுக்கு நீங்களே உதவிக்கொள்ளும் வகையில் வடிவமைக்கப்பட்டது. மேலும், உங்கள் வசதிக்கும், விருப்பத்திற்கும் ஏற்ப சேமிக்கலாம். இத்திட்டம் மாதவருவாய் பெறுவோர், தினக்கூலி பெறும் தொழிலாளிகள், தொழில் நிபுணர்கள் வியாபாரிகள் மற்றும் விவசாயிகளுக்குப் பெரிதும் உதவுகிறது. அத்துடன் கவர்ச்சிகரமான வரிச்சலுகைகளையும் அளிக்கிறது.

ஹோம் லோன் அக்கவுண்ட் ஒரு தேசிய திட்டம். உங்கள் அருகாமையிலுள்ள அரசுடமை வங்கிகளை அல்லது மற்ற பல ஷெட்யூல்ட் வங்கிகள் எதனுடனாவது, நாட்டில் எங்கு வேண்டுமானாலும், தொடர்பு கொண்டு, ஹோம் லோன் அக்கவுண்ட் திட்டத்தை இன்றே துவக்குங்கள்.



**நேஷனல் ஹவுஸிங் பாங்க்**

(இந்திய ரிசர்வ் வங்கியின் முழு உடமை)
ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஹவுஸ் (6 வது மாடி),
18-20 கஸ்தூர்பா காந்தி மார்க்,
புது தில்லி-110 001.
பாம்பே லைஃப் பில்டிங் (3 வது மாடி
45, வீர நரிமன் ரோடு, ஃபோர்ட்,
பம்பாய்-400 023.

எமது இலக்கு : அனைவருக்கும் வசிப்பிடம்

*Chaitra D-NHB 1690 Tam*

# குழந்தை தர்பார்!

சுரேஷ், நாளிதழைக் கொண்டு வந்து அம்மாவிடம் கொடுத்து, "இந்தா பேப்பர் படி! சும்மா பேருக்குப் புரட்டி விட்டுத் தூக்கிப் போட்டு விட்டுப் போய் விடக் கூடாது. கவனமாய்ப் படிக்க வேண்டும். படித்து முடித்தபின் கேள்விகள் கேட்பேன்" என்றான்.

அம்மா ஆண்டாள், நாளிதழைப் படிக்க ஆரம்பித்தவுடன் சுதா, அப்பாவுக்கு இட்ட கட்டளை: 'சூடா அம்மாவுக்கு ஒரு கப் காப்பி போட்டுக் கொண்டு வா! காப்பியை உறிஞ்சியபடியே அம்மா பேப்பர் படிக்க வேண்டும்!'

"காப்பியா? நான் போடணுமா?" என்று அப்பா ராதாகிருஷ்ணன் கேட்க, "அப்பா காப்பி போட்டு, நான் குடிக்கணுமா?" என்று ஆண்டாள் பயத்துடன் முகம் சுளிக்க, ஒரு சின்ன மாற்றம்:

ராதாகிருஷ்ணன் காப்பிக்குப் பதிலாய் டீ போடலாம்; 'இன்ஸ்டண்ட் டீ'யை உபயோகித்துக் கொள்ளலாம்.

பத்து நிமிடத்தில், ஆவி பறக்க டீ வந்தது. குடித்தவர் முகங்கள் அஷ்டகோணலாக மாறின! அப்புறம்தான் தெரிந்தது, இன்ஸ்டண்ட் டீத் தூளுக்கும் சாதாரண டீத் தூளுக்கும் வித்தியாசம் தெரியாத ராதாகிருஷ்ணன், டஸ்ட் தூளைப் போட்டு, டீ தயாரித்து விட்டார் என்பது!

அடுத்து ரத்னகுமார், அப்பாவுக்கு இட்ட கட்டளை: "போய் என் சைக்கிளை நல்லாத் துடைச்சு வை. ஞாயிற்றுக் கிழமையில் டைம் வேஸ்ட் பண்ணாதே!"

ராதாகிருஷ்ணன், "அரை மணி நேரம் கழித்துப் போகிறேனே! டி. வி. யில் திரைமலர்..." என்று இழுக்க,

உடனே, "என்ன! இப்ப இந்த திரைமலர் பார்க்காட்டா, மண்டை வெடிச்சுடுமா? பேசாமல் சொல்கிற வேலையைச் செய்யணும்!" என்று ரத்னகுமார் தைரியமாக அதட்டி விட்டு, நம்மைப் பார்த்து,

"இந்த மாதிரி ஒரு சான்ஸ் கிடைச்சது ஜாலியாத்தான் இருக்கு! தேங்க் யூ!" என்று கண் சிமிட்டினான்! கடைசி வரை ராதாகிருஷ்ணனுக்குத் திரைமலர் பார்க்க அனுமதி கிடைக்கவில்லை!

"போய் எண்ணெய், சீப்பு எடுத்துக் கொண்டு வந்து உட்காரு! நான் தலை பின்னி விடுகிறேன்!" என்று சுதா சொன்னதும் ஆண்டாள் மறு பேச்சுப் பேசாமல் சொன்னதைச் செய்தார்.

சுதா சும்மா இருக்காமல், "ஒழுங்கா தலையை மெயின்டெய்ன் பண்ணறதில்லை. டி. வி. விளம்பரங்களைப் பார்த்துட்டு, விதம் விதமா ஷாம்பூ வாங்கறதுல ஒண்ணும் குறைச்சல் இல்லை. எங்கே, தலைவாரி பின்னிக் கொள்ளும் சமயத்தில், எதிர் பிளாட் ஆண்ட்டியுடன் பேசுவதுதான் உனக்கு முக்கியம்!" என்று சிடுசிடுத்தான்.

குழந்தைகள் மூவரும் அடுப்பங்கரைக்குள் புகுந்து காலை உணவுக்காக உப்புமா தயாரிக்க முடிவு செய்தனர். அம்மாவைச் சமையலறையில் நாற்காலி போட்டு உட்கார வைத்துவிட்டு, தாங்களே நேரடியாய்ச் செயலில் இறங்கினார்கள். வெங்காயம் நறுக்கித் தர வேண்டிய வேலை ராதாகிருஷ்ணனுக்கு! "பச்சை மிளகாய் வேணுமே! ராதாகிருஷ்ணா! கடைக்குப் போய் நாலணா



• "உம்... இன்னும் பளபளப்பா..."

**பெற்றோர்கள் சொல்கிறபடிதானே குழந்தைகள் கேட்டு நடக்க வேண்டியுள்ளது? அதை மாற்றி, ஒரு நாள், குழந்தைகள் சொல்கிறபடியெல்லாம் பெற்றோர்கள் கேட்டு நடக்க வேண்டும் என்றால்...? தி. நகரில் வசிக்கும் பாங்க் மானேஜர் ராதாகிருஷ்ணனின் வீட்டில், ஒரு ஞாயிற்றுக்கிழமை இந்தத் தலைகீழ் தர்பார் நடத்திப் பார்த்தோம்!**

வுக்குப் பச்சை மிளகாய் வாங்கிண்டு வர்றியா?'' என்று சுரேஷ் கிண்டலாய்க் கூறவும், ராதாகிருஷ்ணன் தம்பதிகள் சிரிக்கவும் ஒரே தமாஷ்!

அம்மா சொன்ன அளவுப்படி சாமான்கள் உபயோகித்துத் தயாரித்த உப்புமா ஓ.கே!

''அப்பாவைச் சமைக்கச் சொல்லலாமா?'' என்று சுரேஷ் கேட்க, சுதா சொன்னாள்: ''அப்பா டீ போட்ட லட்சணத்தில், நாம் ரிஸ்க் எடுத்துக்க முடியாது! சாமான்கள் விற்கிற விலையில், எல்லாத்தையும் வீணாக்கக் கூடாது.''

கடைசியில், சமையல் வேலை ஆண்டாளிடமே ஒப்படைக்கப்பட்டது. அவருக்கு உதவும் வேலை ராதாகிருஷ்ணனுக்கு. ''அம்மா! நீ அடுப்படியை விட்டு ஓரடி கூட நகரக் கூடாது! எல்லா எடுபிடி வேலைக்கும் அப்பாவைத்தான் ஏவ வேண்டும்'' என்று உத்தரவு பிறந்தது!

இதற்கிடையில், அவர்களுடைய உறவினர் கணபதி, தம் மகள் பிரியாவுடன் வந்தார். அவர்களை வரவேற்க வாசலுக்கு வந்த அப்பா, அம்மாவிடம், ''நீங்க ரெண்டு பேரும் போய்ச் சமையலைக் கவனிக்கிறீங்களா? கொஞ்சம் கூடப் பொறுப்பே இல்லாம இருக்கீங்களே!'' என்று குழந்தைகள் வெறுப்பேற்ற, இருவரும் கிச்சனுக்குத் திரும்ப, உறவினர் கணபதி பிரமிக்க, விஷயம் விளக்கப்பட்டதும் பிரியா, ''அப்பா, அப்பா! இந்த மாதிரி எனக்கும் நம் வீட்டில் ஒரு சான்ஸ் கொடுங்க!' என்று கேட்க ஆரம்பிக்க, கணபதி அவசரமாக விடை பெற்றார்!



• ''தலையை ஒழுங்கா மெயின்டெய்ன் பண்ற இல்லை...!''




**"அப்பா, நான் தூங்கிட்டேன்னா, இங்கிலீஷ் நியூஸ் வர்றப்ப எழுப்புங்க... மிஸைல் சண்டையைப் பார்க்கணும்..."**



**சா**ப்பாட்டுக்குப் பின், "நான் போய்த் தூக்கம் போடுகிறேன்!" என்ற ராதாகிருஷ்ணனிடம், "என்ன வெட்டியாய்த் தூக்கம்? நான் ஓட்டப் பந்தயத்தில் வாங்கின கப்களையெல்லாம் நன்றாய்ப் பளபளன்னு துடைச்சு வை" என்று உத்தரவு போட்டான் சுரேஷ்.

"ம்! ஓட்டப் பந்தயத்திலே ஜெயிச்ச நீ, இப்ப எங்களை ஓட ஓட விரட்டறே!" என்ற ராதாகிருஷ்ணன், பெருமூச்சுடன் ஒவ்வொரு கோப்பையாய் எடுத்துத் துடைக்க ஆரம்பித்தார்.

டி. வி. யில் பிற்பகல் கன்னடத் திரைப் படம் பார்க்க உட்கார்ந்த ஆண்டாளிடம், "என்ன சினிமா வேண்டிக் கிடக்கு; எங்களோட கேரம்போர்டு ஆட உட்காரு" என்று குழந்தைகள் கட்டளையிட்டனர்.

கேரம் ஆடியபடியே அப்பா கோப்பைகளுக்குச் சரியாகப் பாலிஷ் ஏற்றுகிறாரா என்று கவனித்துக் கொண்டாள் சுதா.

அந்த வேலை முடிந்ததும் ராதாகிருஷ்ணன், "ராத்திரி சாப்பாட்டுக்குத் தேவையானதைக் கவனிக்க வேண்டாமா? குழந்தைகளுக்குப் பசிக்குமே?" என்று ஆண்டாளிடம் கேட்க, உடனே ரத்னகுமார், "எல்லோரும் பீச்சுக்குப் போய்விட்டு, அப்படியே ஹோட்டலில் சாப்பிடலாம்" என்று யோசனை கூற, அவனுடைய உடன்பிறப்புக்கள் ஆமோதிக்க, அப்பா ஒரு முறை பர்ஸைப் பிரித்துப் பார்த்துவிட்டு, அழாத குறையாகச் சம்மதித்தார்.

"முணுமுணுக்கப்படாது; சந்தோஷமா வரணும்" என்றாள் சுதா.

"செலவு ஆரம்பமானாலும் உங்க மிரட்டல் நின்று விடுமே! அதனால் சந்தோஷமாகவே கிளம்பறேன்" என்று கூறி ராதாகிருஷ்ணன் சிரிக்க, அதில் எல்லோருமே கலந்து கொண்டனர்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

வண்ணப்படங்கள்: **யோகா**

நான் ஸின்த்தால் உபயோகிக்கிறேன். நீங்கள்?




வினோதின் உடலுக்கும் உள்ளத்திற்கும் தன்னம்பிக்கை தருவது ஸின்த்தால்.

MADISON-G-001-TAM

# கரைந்த 'குற்றங்கள்!'

குழந்தை பிறந்ததிலிருந்தே பங்கஜா மாற ஆரம்பித்து விட்டாளென்று அவனுக்குத் தோன்றியது.

அதற்கு முன்பெல்லாம்....

''ஏண்டா, நான் பட்டினி கிடக்கணும்னு தான் உன் பெண்டாட்டி சமைக்கறாளா? எனக்கு வயித்தில அல்ஸர்னு தெரியுமில்ல? இப்படிக் காரத்தைக் கொட்டி வச்சா நான் என்னத்தைத் திங்கறதாம்?'' இது போல் அம்மா.

''நான் ஆபீஸ்ல உழைச்சிட்டு சாயங்காலம் களைச்சுப்போய் வீடு வரப்ப ஒரு டம்ளர் காப்பி கலந்துவச்சிருங்க அத்தைன்னு சொல்றேன். அதுக்குத் தன்னலையாம். ஆனா நாலு தெரு நடந்து போய் வேலை மெனக்கெட்ட எவளாச்சும் கிழவியோட உக்காந்து என்னை வாயில போட்டு அரைச்சிட்டு வர நல்லாவே தள்ளுது உங்கம்மாவுக்கு.'' — இதுபோல் மனைவி.

என்ன செய்வான் கார்த்திகேயன்? தாயும் மனைவியும் மல்லுக்கு நிற்கும் போது அவனை ஏன் இடையில் இழுக்க வேண்டும்? 'உன்பெண்டாட்டி'. 'உங்கம்மா'. என்னவோ தவறெல்லாம் அவனுடையது போல்.

''ஏண்டியம்மா, இருபத்தஞ்சு வருஷம் அருமையா வளர்த்து, என் பிள்ளையை உனக்குத் தாரை வார்த்துக் குடுத்துட்டேன்னு நினைச்சுகிட்டியோ?''

எந்தச் சண்டையிலும் முத்தாய்ப்பாக அம்மா அந்த இருபத்தைந்து வருஷக் கணக்கைத்தான் சொல்வாள். உடனே பங்கஜாவின் முகம் ஜிவுஜிவுக்கும். கண்களில் ஒரு பதற்றம் சூழும்.

''நீங்க இருபத்தஞ்சு வருஷம் வளர்த்தா என்ன? இப்ப என் புருஷன்தானே?''

இரவின் தனிமையில் பங்கஜா தாபத்துடன் கணவனின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருப்பாள்.

இருபத்தைந்து வயது வாலிபனை அவள் மணந்தாள். இனி அவனோடு ஆயுளெல்லாம் எத்தனை நெருக்கமும் பரிச்சயமும் நேர்ந்தாலும் அவன் வாழ்வின் அந்த இருபத்தைந்து ஆண்டுகள் அவள் அறியாதவை. அவன் தாய் மட்டுமே அறிந்தவை. அவை அவன் தாயின் உடமை. இவளுக்கில்லாத ஒன்றை அவள் வைத்திருக்கிறாள்...

ஆவேசமுற்றவள் போல பங்கஜா அவன் கையை இறுகப் பற்றுவாள். நீ எனக்குத்தான் சொந்தம், எனக்குத்தான், எனக்குத்தான் என்பது போல் உதடுகள் மௌனமாய்த் துடிக்கும்.

இரண்டாண்டுகளில் மாமி — மருமகள் சண்டை முற்றியிருந்த கட்டத்தில் பங்கஜா கருவுற்றாள். பேறுக்குப் பிறந்தகம் செல்லு முன் கணவனிடம் சொன்னாள்.

''இனியும் நான் உங்கம்மாவோட சேர்ந்து இருக்கமாட்டேன். குழந்தையை எடுத்துகிட்டு நான் திரும்பி வரதுக்குள் நமக்குத் தனி வீடு பார்த்துடுங்க.''

''என்ன பங்கஜ் இது? நீ வேலைக்குப் போற பெண். இத்தனை காலம் நாம தனியாயிருந்திருந்தாக் கூடப் பரவாயில்லை. ஆனா இனிமே தானே குழந்தையைக் கவனிக்க வீட்ல யாராவும் இருக்கணும்? அம்மா கவனிச்சுப்பாங்க.''

''உங்கம்மா ஒண்ணும் என் குழந்தையைக் கவனிச்சுக்க வேணாம். வேற ஏற்பாடு செஞ்சுக்கலாம். இதுதான் என் முடிவு. அப்படி உங்களுக்கு இருபத்தஞ்சு வருஷத் தொடர்ச்சியாய் ஆயுசுக்கும் அம்மா மடியிலதான் உக்காந்திருக்கணும்னு ஆசையாயிருந்தா.....''

''முருகா!''

ஆண் குழந்தை.

கார்த்தி பெருமையை மனசுக்குள் அடக்கிக் கொண்டான். அவன் தாய் வெளிப்படையாய்க் காட்டினாள்.

தொட்டில் சடங்குக்கு அவனோடு அவளும் மதுரைக்குக் கிளம்பிய போது அவன் உள்ளூர பயந்தான். அம்மாவைப் பார்த்துவிட்டுப் பங்கஜா எப்படி நடந்து கொள்வாளோ? கடந்த இரண்டு மாதங்களாய் எவ்வளவு முயன்றும் இன்னும் வீடு கிடைத்தபாடில்லை. தனிக்குடித்தனம் போகப் போவதுபற்றி அம்மாவிடம் இதுவரை சொல்லவில்லை. தயக்கமாயிருந்தது. அம்மா புண்பட்டுப் போவாள். அதே சமயம் மனைவியின் அதிருப்தியையும் தொடர்ந்து சமாளிக்க முடியாது. ஆணாய்ப் பிறந்தாலே இந்தத் தொல்லைதான்..... இப்போது என் மாதிரிதிண்டாடுவதற்கு ஒ ?





வாரிசு வேறு பிறந்திருக்கிறான்!' என்று பெருமையோடு சலித்துக் கொண்டான்.

பேரனைப் பார்த்து அவன் தாய் அக மகிழ்ந்து போனாள். அதே போல் அகமகிழ அதன் தாத்தா உயிரோடு இல்லையே என்று கண்ணீர் சிந்தினாள். ''என் பட்டுக் கிளி! மொட்டுமல்லி!'' என்று ஏதேதோ கொஞ்சிக் குழந்தையைத் தூக்கி மடியில் விட்டுக் கொண்டாள். ''குஞ்சுக் காலுக்குத் தங்கக் காப்பு போடுவமா?'' என்று குழந்தைக்காகச்



செய்து கொண்டு வந்திருந்த புதுக் காப்பு, சங்கிலிகளை அணிவித்தாள். ''அப்படியே அப்பா ஜாடைதான். ஏண்டா ராஜாப் பயலே, நீ குட்டிக் கார்த்திதானா?'' என்று பேரனை உச்சிமோந்து முத்தமிட்டாள். பங்கஜாவின் கண்கள் அக்காட்சியிலேயே மூழ்கியிருந்தன.

கார்த்திகேயன் யாரும் பார்க்காத நேரங்களில், அல்லது பார்க்கவில்லை என்று நினைத்த நேரங்களில், தொட்டிலருகில் சென்று குழந்தையைத் தொட்டுத் தொட்டுக் கையை முத்தமிட்டுக் கொண்டான்.

அவர்கள் அங்கு இருந்தவரையில் மாமியார் — மருமகள் வாக்குவாதம் ஏதும் நிகழவில்லை.

தொட்டில், நாமகரணச் சடங்குகள் முடிந்து அவர்கள் நாலு நாட்களில் ஊர் திரும்புவதற்குள் அவன் தாய் நானூறு தடவையாவது ''அப்படியே அப்பனை உரிச்சுகிட்டு வந்து பிறந்திருக்கான் என் பேரன்'' என்று சொல்லிவிட்டாள்.



கடிதமூலமாக அலுவலகத்தில் லீவை நீட்டித்துக் கொண்டு பங்கஜா குழந்தைக்கு ஆறு மாதம் ஆகும் வரை மதுரையிலேயே இருந்தாள். இங்கு சென்னையில் கார்த்தி வீடு தேடினான். அவன் சக்திக்கு உட்பட்ட தாய்க் கிடைக்கவில்லை.

பங்கஜா இனியும் லீவ் எடுத்தால் பாதிச் சம்பளம்தான் கிடைக்கும் நிலையில் கார்த்தி நேரில் போய் மனைவியிடம் கேட்டான்: இப்போது அவள் உடனடியாய்க் குழந்தையோடு ஊர்திரும்பி வந்து வேலைக்குப் போனால் என்ன? அங்கு இருந்தபடியே வீடு பார்க்கலாம். கிடைத்ததுமே தனிக் குடித்தனம்தான். குழந்தையை அம்மா பார்த்துக் கொள்ளும் வரை பார்த்துக் கொள்ளட்டும். கொஞ்சம் வளர்ந்து விட்டால் பிறகு குழந்தையைத் தனியே அவர்கள் கவனித்துக் கொள்வதும் அதிக சிரமமில்லையே....

வேறு வழியின்றிப் பங்கஜா ஒப்புக் கொண்டாள்.

பாட்டிக்கு, பேரனோடு கழிக்க நேரம் போதவில்லை. கொஞ்சிக் கொஞ்சி மகிழ்ந்தாள். "அட என் தங்கம்! அட என் செல்லம்! அட என் பட்டு! அட என் முத்து!" என்று நாளெல்லாம் கடவுள் சகஸ்ரநாமம் போல் வீட்டில் நாமாவளி ஒலித்தது.

பங்கஜாவின் கண்களில் ஏதோ யோசனை. மாமியார் மடியில் குழந்தை படுத்திருக்கும் காட்சியைப் பார்த்துக் கொண்டே



# 500 உஜாலா ரொக்கப் பரிசுகள்

# உஜாலா

## உஜாலாவின் விஞ்ஞானத் தன்மை




### மனோதத்துவம்

குழந்தைகள் இளமனதில் வெள்ளை ஆடைகள் எந்த அளவிற்கு சுகாதாரம், ஒழுக்கம், இலட்சியம் மற்றும் இதரப் பண்புகளை வளர்க்க உதவுகின்றன என மனோதத்துவ நிபுணர்கள் உங்களுக்கு கூறுவார்கள்

### பௌதீகம்

வெள்ளை ஆடைகள் எவ்வாறு சூரிய ஒளியிலிருந்து பெருமளவு உஷ்ணத்தை வெளியேற்றி சருமத்தைக் காக்கின்றன என்றும் உஷ்ணத்தினால் சருமம் கருமையாகாமல் எவ்வாறு காக்கின்றன என்றும் பௌதீக நிபுணர்கள் உங்களுக்கு கூறுவார்கள்.

### இரசாயனம்

ஒப்பற்ற, நுட்பமான இரசாயனம் மட்டுமே பளிச்சென்ற, மாசற்ற ஒளி வீசும் வெண்மையை வெள்ளை ஆடைகளுக்கு தர முடியும். இவை அனைத்தும் அடங்கிய தயாரிப்பே உஜாலா. இது ஒரு சாதாரண சொட்டு நீலம் அல்ல. நீரில் விரைவாக கரைய வேண்டும் — உடைகளின் இழைகளில் ஆழ ஊடுருவி வேகமாக உறிஞ்சப்பட வேண்டும் — விஞ்ஞான முறை அற்ற தயாரிப்புகளில் இருப்பது போன்ற இரசாயனம் இருத்தல் கூடாது; அவற்றை தொடர்ந்து உபயோகித்தால் துணிகளுக்கு சேதமுண்டாகும் அல்லது குழந்தைகளின் சருமத்திற்கு தீங்கு உண்டாக்கும். தவிர துணிகளில் படிந்திடும் கறை போன்றவையினால் சோபையிழந்து காணப்படும் இவை அனைத்து விஷயங்களையும் மனதில் கொண்டே, அங்கக இரசாயனத்தில் டாக்டர் பட்டம் பெற்றுள்ள விஞ்ஞானி ஒருவரால் பல்வேறு ஆராய்ச்சி மற்றும் பரிசோதனை செய்யப்பட்டு உருவாகி உள்ளது உஜாலா.

### உஜாலா பாதுகாப்பின் சின்னம்

வாய்வழி நச்சு மூலம் (ORAL TOXICITY TEST) நடத்திய ஆராய்ச்சிகள், உஜாலா நச்சுத் தன்மை அற்றது என நிரூபித்து உள்ளன. சரும அரிப்பு பரிசோதனை (SKIN IRITATION TEST) நடத்தியதில் சருமத்திற்கு அரிப்பு ஏற்படுத்துவது இல்லை என்றும் கண்டு அறியப்பட்டுள்ளது.

உஜாலாவில் ஆடைகளுக்கு சேதமுண்டாக்கும் எந்த இரசாயனமும் கிடையாது. எனவேதான் உஜாலாவை மீண்டும், மீண்டும் வாங்குகிறார்கள்

### 500 உஜாலா ரொக்கப் பரிசுகள் :

இன்றைய நுகர்வோர்கள் இலவசமாய கிடைக்கும் மற்ற பொருள்களுக்காக இன்றி உஜாலா போன்ற நல்லதொரு பொருளை வாங்குவதன் காரணம் என்ன ? நுகர்வோர்கள் உஜாலாவை எப்படி கவனித்து வாங்குகிறார்கள் என்றும் ? எப்படி உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் விஞ்ஞான முறையற்ற சொட்டு நீலங்களை வாங்குவதை தவிர்க்கிறார்கள் என்பதையும் உஜாலா பாட்டிலில் உள்ள விலாசத்திற்கு ஜூன் 30தி 1991. முன்பு அனுப்பவும். தகுந்த விமர்சனங்களுக்கு ரூ. 50 வீதம் 500 நபர்களுக்கு ரொக்கம் பரிசாக வழங்கப்படும்.

RAM/JL/2.03



**JYOTHY LABORATORIES, BOMBAY.**

நிற்பாள். பிறகு அதே போல் தன் மடியில் குழந்தையைக் கிடத்திக் கொண்டு அதைப் பார்த்தபடி அமர்ந்திருப்பாள். குழந்தை பிறந்தது முதலே அவள் மாற ஆரம்பித்திருந்தாள் என்ற உணர்வு கார்த்திக்கு மீண்டும் தோன்றும்.

குழந்தை வளர்ந்து கொண்டு வந்தான். ஆண்டு நிறைவு. இரண்டாம் வயது. மூன்றாம் வயது. எல்.கே.ஜி.

தனி வீடு பார்க்கும் யோசனை எப்போது நின்று போயிற்று என்று யாரும் உணராமாலே நின்று போயிற்று.

வேலையிலிருந்து திரும்பும் பங்கஜா, பள்ளியிலிருந்துதிரும்பும்ஐந்துவயதுமகனை அணைத்துக் கொஞ்சுவாள். எப்போதாவது மாமியார் கடிந்து பேசும் பேச்சுகள் அவள் காதுகளை எட்டுவதில்லை. மகனின் பேச்சை, முகத்தை, ருசிகளை, விளையாட்டை, வளர்ச்சியை, கவனித்துக் கொண்டே தன் மனத்தில் வளரும் புது உணர்ச்சியோடு கணவனைப் பார்க்கும் போது அவள் கண்களில் அலாதியானதோர் நிறைவு தெரிந்தது.

பேப்பர் படித்துக் கொண்டிருந்தவன் தற்செயலாய்த் தலை நிமிர்ந்த போது மனைவியின் பார்வை ஒரு விசித்திரக் கனிவும் கர்வமும் சுமந்து தன்மீது படிந்திருப்பதைக் கவனித்தான்.

''என்ன அப்படிப் பார்க்கறே பங்கஜா?''

''ஒண்ணுமில்லையே.''

''வீடு பார்க்காமலேயே இருக்கானேன்னு நினைக்கறியா?'' அக் கேள்வியில் பாதி வேடிக்கை, பாதி குற்ற உணர்வு.

''இனிமே பார்க்கவே வேணாம். உங்கம்மாகிட்டே எனக்கு இப்ப ஒரு கோபமும் இல்லே.''

''புரியுது. குழந்தை பிறந்துட்டான். அவன் தான் இப்ப உன் உலகம். எங்கே இருக்கோம் கிறதோ மாமியார் திட்டுகளோ இனிமே பொருட்டில்லை. ஏன், புருஷன்கூட இனி ரெண்டாம் பட்சம்தான், அப்படித்தானே?''

பங்கஜாவின் கண்களில் உள் ஆழத்துள் எதையோ காணும் ஒளி. ஒன்று இரண்டு மூன்று என்று வயது கூடி அவள் மகன் வளர வளர, பள்ளிப் பருவம், கல்லூரிப் பருவம், உத்தியோகப் பருவம், திருமணப் பருவம் என்று பின்னால் விரிந்து கொண்டே போகப் போக,

மனம் சொல்லும்: இப்படித்தான், இப்படித்தான் இவன் அப்பாவும்....

மெல்ல மெல்லக் கைகூடிவிடும் அந்த இருபத்தைந்து ஆண்டுகளும்ஒரு வகையில்....

''சொல்லு பங்கஜி! புருஷன் கூட இனி ரெண்டாம் பட்சம்தான், இல்லையா?''

பங்கஜா எழுந்து வந்து அவன் தலைமுடியைச் செல்லமாய் அளைந்தாள். ''புருஷனை இப்பத்தானே கொஞ்சம் கொஞ்சமா அடைஞ்சுகிட்டு வரேன்!''

''அப்படின்னா?''

அவள் பதில் சொல்லாமல் புன்னகை செய்தாள்.

# ஆகாசத் தாமரை

## 5

சன்னானா சொன்னபடி செய்து விட்டான். ரிஸர்வ் பாங்க் அனுமதி கிடைத்து டெலெக்ஸ் போய் விட்டது. மஞ்சுளா ஏற்கெனவே தனக்கிருந்த ஒரு பதினோரு மணி 'அப்பாயின்ட்மெண்டை' ரத்து செய்து விட்டு, சன்னானாவுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள்...

துருவ் அவளிடம் நேற்றுக் காலையில் சுபாவமாகப் பேசியதோடு, மாலையில் அவள் வீட்டுக்கு வந்ததும் அவளுடன் சேர்ந்து தேநீர் குடித்தான். அவனிடம் ஏற்பட்டிருந்த மாறுதல் அவளுக்குச் சிறிது வியப்பைத் தந்தது. ஆனால் அதன் காரணத்தை ஆராய விரும்பவில்லை.

"நான் கச்சேரி பண்ணலாமான்னு பார்க்கிறேன்" என்றான் துருவ் திடீரென்று.

அவள் ஆச்சர்யத்துடன் அவனைப் பார்த்தாள்.

"பயப்படாதே... முன் நடந்தது மாதிரி ஆகாது. ஆனா ஒரே ராகந்தான் வாசிப்பேன், ரெண்டு மணி நேரம்... ஜனங்க கேக்கத் தயாரா இருக்கணும்..."

"அதெப்படி? ஜனங்களைப் பொறுத்த வரையில், கச்சேரி ஒரு என்டர்டெய்ன்மெண்ட். ஒரே ராகத்தை இரண்டு மணி நேரம் வாசிச்சுட்டுக் கச்சேரி முடிஞ்சிடுத்துன்னு சொன்னா, அவங்க ஏத்துப்பாங்களான்னு தெரியலே..."

"நான் எனக்காக வாசிக்கிறேன். அவங்க எதேச்சையாப் பலனடையறாங்க, அவ்வளவுதான்..."

"இது சரியில்லேன்னு எனக்குப் படறது."

"டிக்கெட்டு வச்சாத்தானே, அவங்க காசு கொடுக்கிற காரணத்துக்காக, நான் அப்படி வாசிக்கணும், இப்படி வாசிக்கணும்னு எதிர்பார்ப்பாங்க? 'ஃப்ரீ' கச்சேரியா இருந்தால்?"

"ஒரு ராகத்தையாவது முழுக்கக் கீர்த்தனையோட வாசிப்பியா?"

"'கியாரண்டி' பண்ண முடியாது. அன்னிக்கிருக்கிற 'மூடை'ப் பொறுத்தது."

"துருவ்... உன் பிரச்னை என்னன்னு எனக்கு இன்னும் புரிய மாட்டேங்கிறது. நன்னா வாசிச்சுண்டேயிருக்கே, திடீர்னு நிறுத்திடறே. நிறுத்தறதுக்கு என்ன காரணம்? அந்தக் கணத்திலே உனக்கு என்ன தோணறது?"

"திடீர்னு ஒரு விரக்தி மனப்பான்மை. ஒரு 'ப்ளைன்ட் அல்லே'லே, ஐ மீன், இதுக்கப்புறம் தொடர்ந்து போக முடியாது; தெருவே கிடையாதுங்கிற மாதிரி ஒரு வகையான ஏமாற்றம்... எப்படிச் சொல்றதுன்னு எனக்குத் தெரியலே... வழியை அடைச்சிண்டிருக்கிற கண்ணுக்குத் தெரியாத, இந்தக் கதவை உடைச்சிண்டு போய்ப் பார்த்தாத்தான், சொர்க்கத்துக்குப் போற ராஜ பாதை, கண்ணுக்குத் தெரியுங்கிற மாதிரி ஓர் உணர்வு... என்னாலே அது முடியாதுங்கிறதும் எனக்குத் தெரியும்... இதனாலே ஏற்படற விரக்தி, ஏமாற்றம் — என்னாலே தொடர்ந்து வாசிக்க முடியலே," என்றான் துருவ்.

"இப்படி நீ அற்புதமா வாசிக்கிறதே ஒரு சாதனை, தெரியுமா உனக்கு?" என்றாள் மஞ்சுளா, சிறிது உணர்ச்சிவயப்பட்ட நிலையில்.

"நான் சாதனையா நினைக்கலே. மத்தவங்களைப் பற்றி நான் கவலைப்படலே."

அவன் இப்படி அவளுடன் இதுவரை பேசியது கூடக் கிடையாது... அவன் விரும்பியபடி கச்சேரிக்கு ஏற்பாடு செய்தால் என்ன...? வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாம்.

மந்திரிக்கு இசை என்றால் மிகவும் பிடிக்குமென்று சன்னானா சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. அவரையும் கூப்பிடலாம். துருவ் இப்போதைய மனநிலையில் இதைப் பற்றி எந்த ஆட்சேபணையும் எழுப்ப மாட்டான் என்று அவளுக்குத் தோன்றிற்று.

இண்டர்காம் ஒலித்தது. சன்னானா வந்துவிட்டான்.

"குட்மார்னிங், மேடம்."

சன்னானாவின் முகம் சந்தோஷத்தால் மலர்ந்திருந்தது.

"குட்மார்னிங், மிஸ்டர் சன்னானா, உட்காருங்கள்."

"நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே கொஞ்சம் கஷ்டமாக இருந்தது. ஆனால் உங்களுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதியைக் காப்பாற்றியாக வேண்டுமல்லவா?"

"தாங்க்ஸ். உங்கள் அகராதியில் 'முடி

இந்திரா பார்த்தசாரதி

யாது' என்பதே இடையாது என்பது எனக்குத் தெரியும்.''

அவனுக்கே இயல்பான அட்டகாச மான சிரிப்பு. ஆமோதிக்கும் வகையில்.

''எனக்கு இன்று மிகவும் மகிழ்ச்சியான நாள். ஒன்று, நீங்கள் என் காரியத்தை முடித்துத் தந்திருக்கிறீர்கள். இரண்டு என் பிள்ளை — எப்பொழுதுமே தனக்காக மட்டுமே வீணை வாசிப்பவன் — மற்றவர்களுக்காகவும் வாசிக்க ஒப்புக் கொண்டிருக்கிறான்.''

''வெரி குட்... மந்திரி வீட்டில் ஒரு 'மியூஸிகல் ஈவினிங்'குக்கு ஏற்பாடு செய்வோம்.''

புதுப் பிரச்னை முளைத்து விட்டதே என்று நினைத்தாள் மஞ்சுளா. நிச்சயமாகத் துருவ் மந்திரி வீட்டுக்குப் போய் வாசிக்க மாட்டான்.

''என்ன சொல்லுகிறீர்கள், எப்பொழுது ஏற்பாடு செய்வோம்?'' என்றான் சன்னானா.

''என் வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாமென்று பார்க்கிறேன். என் வீட்டுக்கு வருவதில் அவருக்கு ஆட்சேபணை ஒன்றுமிருக்காதே?''

''நிச்சயமிருக்காது. அவர் மிகவும் எளிமையான மனிதர். சங்கீதம் என்றால் உயிர்.''

''மந்திரியின் சௌகர்யத்தைப் பார்த்துத் தகவல் தெரிவியுங்கள். நான் ஏற்பாடு செய்கிறேன்'' என்றாள் மஞ்சுளா.

சன்னானா தலையை ஆட்டியபடியே அலுவலக அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தான். ''மிக நேர்த்தியாக வைத்திருக்கிறீர்கள். அதோ அந்த 'பெயின்டிங்' அருமையாக இருக்கிறது; யார் வரைந்தது?'' என்றான்.

''அதுவா... துருவ்...''

''உங்கள் மகன் வரைந்ததா? இசை, ஓவியம், எந்தக் கலைத் துறையைத்தான் விட்டு வைத்திருக்கிறார் அவர்? மந்திரிக்கு ஓவியம் என்றாலும் மிகவும் பிடிக்கும்...''

''இப்பொழுது அவன் வரைவதில்லை... சரி... நம் விஷயத்துக்கு வருவோம்...'' என்றாள் மஞ்சுளா.

''எனக்குச் சில விஷயங்கள் அலுவலக மேஜையெதிரே உட்கார்ந்து கொண்டு பேசப் பிடிப்பதில்லை. சோபாவில் உட்காருவோமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சன்னானா.

அவன் எதற்காக இப்படிச் சொன்னான் என்று மஞ்சுளாவுக்குப் புரியவில்லை. ஒரு வேளை, மேஜை இழுப்பறைகளில் 'மினி டேப் ரெகார்டர்' இருக்கக் கூடுமென்று சந்தேகப்படுகிறானோ?

இருக்கலாம். இன்றைய வியாபார உலகில் யாரைத்தான் நம்புவது? அவன் முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்வதில் வியப்பில்லை.

''ஓ. கே... வாருங்கள், உட்காரலாம்.''

அவர்கள் உட்கார்ந்ததும் அவன் கேட்டாள்:



''என்ன குடிக்கிறீர்கள், காப்பி?''

''ஓ. கே.''

''சரி, சொல்லுங்கள்... நான் எப்படிக் கொடுக்க வேண்டும்? 'செக்'காக இருந்தால் யார் பேருக்கு?'' என்றாள் மஞ்சுளா.

சன்னானா பெரிதாகச் சிரித்தான்.

''என்ன சிரிக்கிறீர்கள்?''

''இண்டலா செய்கிறீர்கள்?''

''எனக்குப் புரியவில்லை.''

''உங்களிடமிருந்து யார் பணத்தை எதிர் பார்த்தார்கள்?''

''இன்னும் புரியவில்லை.''

''நான் சிகரெட் குடிக்கலாமா?''

''தாராளமாய்.''

அவன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். ''எப்படி உங்கள் மேஜையை நீங்கள் துப்புரவாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் திறமையைப் பாராட்டுகிறேன்'' என்றான்.

''தாங்க்ஸ்.''

அவன் என்ன சொல்ல விரும்புகிறான்? எதற்கு இந்தப் பூர்வ பீடிகை?

காப்பி வந்தது. காப்பியைக் கலந்து, கோப்பையை அவனிடம் நீட்டினாள்.

''தாங்க் யூ...''

அவன் லேசாக உறிஞ்சியதும், புன்னகையுடன் சொன்னான்: ''வெரிகுட் காப்பி.''

''தாங்க் யூ.''

அவன் கோப்பையைக் கீழே வைத்தான். பிறகு குரலைத் தாழ்த்தி, துருவ் வரைந்திருந்த ஓவியத்தைப் பார்த்துக் கொண்டே சொன்னான்: ''அடுத்த வார இறுதியில் மந்திரி ஜெனிவா போகிறார். நானும் அவர் கூடச் செல்கிறேன். உங்கள் பிரதிநிதி யார்,



ஐரோப்பாவில்?''

மஞ்சுளாவுக்குப் புரிந்து விட்டது. உள்நாட்டுப் பணம் வேண்டாமென்கிறான். அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள்.

சன்னாளா தன் பையிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்துக் கொடுத்தான். ''அடுத்த வார இறுதியில் சனிக்கிழமை பிற்பகல் நான்கு மணிக்கு இந்த ஓட்டலில் வந்து என்னைச் சந்திக்கச் சொல்லுங்கள்... இன்னொரு விஷயம்... ஜப்பானிலிருந்து இறக்குமதி செய்வதற்கும் நீங்கள் விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா?''

''நானா, இல்லையே?''

''விண்ணப்பித்துக் கொண்டிருக்கும் ஹரிகிஷன் யாரென்று எனக்குத் தெரியும். அவனால் இந்த அளவுக்கு உற்பத்தி செய்ய முடியாது என்றும் எனக்குத் தெரியும். பயப்படாதீர்கள். அந்த 'லைசென்சு'ம் உங்களுக்குக் கிடைத்துவிடும். உங்கள் பிரதிநிதியை என்னைப் பார்க்கச் சொல்லுங்கள். சரி, கச்சேரி எப்பொழுது வைத்துக் கொள்ளலாம்?'' என்று கூறிக் கொண்டே, சிகரெட் துண்டை 'ஆஷ்-ட்ரே'யில் போட்டான் சன்னாளா.

சிறிது நேரம் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்த மஞ்சுளா சொன்னாள்: ''நீங்கள் ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்ததும் சொல்லுங்கள்,'' ஏற்பாடு செய்கிறேன்.

''நோ... நாளைக்கே வைத்துக் கொண்டால் என்ன?''

''நாளைக்கா? துருவ்வைக் கேட்க வேண்டும்''

''நான் கேட்கட்டுமா? மந்திரி வருகிறாரென்றால் மிகவும் பெருமையாக இருக்குமே அவருக்கு?''

''இல்லை. நானே கேட்டு, ஃபோன் செய்கிறேன்.''

''மந்திரி உங்களைப் பார்க்க வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தார். பழைய மந்திரி உங்கள் நண்பரென்று இவருக்குத் தெரியும்.''

மஞ்சுளா சிரித்தாள்.

''எதற்குச் சிரிக்கிறீர்கள்?''

'''பழைய' என்றதும், ஏதோ ரொம்ப காலத்துக்கு முன்னால் என்பது போல் தோன்றுகிறது. மாதா மாதம் மந்திரிகள் மாறுகிறார்கள், அல்லது அவர்களுடைய இலாகா மாறுகிறது'' என்றாள் மஞ்சுளா புன்னகையுடன்.

''கரெக்ட். மந்திரி மாறலாம். ஆனால் சன்னாளா மாறுவதில்லை...'' என்றான் அவன் அட்டகாசமாய்ச் சிரித்துக் கொண்டே.

அவன் போன பின்பு மஞ்சுளா தன் அலுவலக நாற்காலியில் போய் உட்கார்ந்தாள். அவள் மேலுதட்டைக் கீழ்வரிசைப் பற்களால் வெளியே தெரியாமல் கடித்துக் கொண்டே யோசித்தாள்.

பரம ரகசியமாய் வைத்திருந்த செய்தி இவனுக்கு எப்படித் தெரிந்தது? ஹரிகிஷன் சொல்லியிருக்க முடியாது. அவளுடைய அலுவலகத்திலும் யாருக்கும் தெரியாது. அவளுடைய அந்தரங்க ஆலோசகரைத் தவிர. அவளுடைய அந்தரங்க ஆலோசகர் பத்மநாபன், அவளுடைய கணவருக்கு மிகவும் வேண்டியவர். தம்மை வெளிக்காட்டிக்



அதிகாரி: ஊர்வலம் வந்த ரெண்டு கோஷ்டிகளுக்கு இடையே, பயங்கரக் கலவரம் நடக்குதுன்னு சொன்னீங்க. வந்து பார்த்தா சத்தத்தையே காணோமே?

இன்ஸ்பெக்டர்: நடக்கிறது மௌன ஊர்வலமாச்சே; அதான் சத்தம் போடாம அடிச்சுக்கிட்டாங்க.

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

கொள்ளாமல் மிகவும் சிக்கலான கணக்கு விவகாரங்களையெல்லாம், சுலபமாகத் தீர்த்து வைப்பதில் கெட்டிக்காரர். அவரைச் சந்தேகிப்பது நியாயந்தானா? அவருக்கு இப்படிச் செய்ய வேண்டுமென்ற அவசியமுமில்லை. ஒரே மகள். கல்யாணமாகி அமெரிக்காவிலிருக்கிறாள். அவரும் ஓய்வு பெற விரும்பினார். அவள்தான் அவரை விடவில்லை...

அவள் பத்மநாபனை ஃபோனில் கூப்பிட்டாள். அவர் வீட்டிலிருந்தே வேலை செய்து வந்தார். அலுவலகத்துக்கு எப்பொழுதாவதுதான் வருவார்.

"பத்மநாபன்."

"மஞ்சுளா பேசறேன்."

"சொல்லுங்கம்மா."

"நீங்க கொஞ்சம் ஆஃபீசுக்கு வர முடியுமா?"

"என்ன விஷயம்? அவசரமா?"

"ஆமாம்."

"அரை மணியிலே வர்றேன்."

சன்னானா சொன்னது சரிதான். மந்திரிகள் மாறலாம், சன்னானா... இல்லை... சன்னானாக்கள் மாறுவதில்லை. ஜனநாயகம் என்பது இருக்கும்வரை, ஜனநாயகத்தைக் காப்பாற்றத் தேர்தல் என்பது இருக்கும் வரை, தேர்தலில் போட்டியிட்டு ஜனநாயகத்தைக் காப்பாற்ற அரசியல் கட்சிகள் இருக்கும் வரை, சன்னானாக்கள் மாறுவதில்லை. ஆக, ஜனநாயகத்தின் பாதுகாவலர்கள் யார்? சன்னானாக்கள்தாம். இதுதான் இன்றைய அரசியல் தர்மம். அடுத்த வார இறுதியில், ஐரோப்பாவில் ஃப்ராங்ஃபர்டில் இருக்கும் அவனுடைய பிரதிநிதியாகிய நிக்கல்ஸன், ஜெனிவாவில் சன்னானாவைச் சந்தித்துப் பேசி, இந்திய ஜனநாயகத்தைக் காப்பாற்றப் போகிறான்! எத்தனை நிக்கல்ஸன்கள், எத்தனை சன்னானாக்களை ஜெனிவாவில் சந்தித்து, இந்திய ஜனநாயகத்தைக் காப்பாற்ற அரும்பாடுபட்டிருக்கிறார்களோ; இனியும் பாடுபடப் போகிறார்களோ!

அவள் தொழில் நிறுவனத்தின் பொறுப்பை மேற்கொண்ட போது, லாபத்துக்காகப் பின்பற்றப்படும் பல வியாபார நெறிமுறைகள் அவளுக்கு அதிர்ச்சியைத் தந்தன. ஆனால் இதற்குக் காரணம் தொழில் நிறுவனங்கள் மட்டுமல்ல, அரசாங்கச் சட்டங்களும், விதிமுறைகளும், கட்டுப்பாடு என்ற பேரில் அரசாங்கத்தை — சொல்லப் போனால், இந்த நாட்டு மக்களை — ஏமாற்றுவதற்கு வியாபாரிகளுக்கு மறைமுகமாக ஊக்கமளித்தன! இப்பொழுது அவளுக்கு எதுவுமே அதிர்ச்சி தருவதில்லை...

**ப**த்மநாபன் உள்ளே வந்தார்.

"என்னம்மா, என்ன அவசரமான விஷயம்?" என்று கேட்டுக்கொண்டே நாற்காலியில் உட்கார்ந்தார்.

"ஹரிகிஷன்" என்றாள் மஞ்சுளா.

"ஏன், அவனுக்கென்ன?" என்று பதற்றத்துடன் கேட்டார் பத்மநாபன்.

"சன்னானாவுக்குத் தெரிந்துவிட்டது."

"ஐ ஸீ..."

"பத்மநாபனின் தாடை இறுகியது. அவர் தீவிரமான சிந்தனையிலாழ்ந்தார்.

"ஹரிகிஷன் ரொம்ப 'சேஃப்'னு நீங்கதான் சொன்னீங்க."

"ஆமாம். இப்பவும் சொல்றேன்" என்றார் பத்மநாபன்.

"பட்..."

"ஐ ஆம் ஸாரி... நீங்க சன்னானா வந்த போது என்னைக் கூப்பிட்டிருக்கலாம். அவன் பெரிய இல்லாடி... ஒரு யூகத்தைத் தனக்கு நிச்சயமாகத் தெரிந்த மாதிரி சொல்லியிருப்பான். நீங்கள் அவன் வலையிலே விழுந்துட்டீங்க... வாட் ஹாப்பெண்ட், சொல்லுங்க."

அவள் சொன்னாள்.

பத்மநாபன் சிறிதுநேரம் பேசாமலிருந்தார். பின்னர், "சன்னானா இந்த மந்திரியோட ஆள்னு உங்களுக்கு நிச்சயமாத் தெரியுமா?" என்று கேட்டார்.

"நேத்திக்கு 'ரிஸர்வ் பாங்க் கிளியரன்ஸ்' வந்திருக்கே..."

"அது வேறே விஷயம்... ஜெனிவாவுக்கு இந்த மந்திரி போறார்ங்கிறது வாஸ்தவம்தானான்னு விசாரிக்கிறது நல்லது."

"ஏன்?"

"பணம் எங்கே போறது, மந்திரிக்கா, சன்னானாவுக்கான்னு தெரிய வேணாமா?"

"மந்திரி ஜெனிவா போனாலும், பணம் யாருக்குப் போறதுன்னு எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? கண்டுபிடிச்சு என்ன பண்ணப் போறோம்...?" என்றாள் மஞ்சுளா விரக்தியுடன்.

"சரி... இன்னிக்குக் காயத்திரி ஜெபம். நீங்கள் கூப்பிட்டீர்களென்று பாதியிலே ஓடி வந்தேன். நான் கிளம்பறேன். வி வில் திங்க் அபௌட் இட்" என்றார் பத்மநாபன்.

(தொடரும்)

# நீங்கள் சதாம் கட்சியா? புஷ் கட்சியா?



• நீடிக்கிறாரா!

○ கே. இந்துகுமரப்பன், விழுப்புரம்.

? ஈராக் மீது போர் தொடுத்ததால் ஜார்ஜ் புஷ்ஷை எதிர்த்து அமெரிக்க மக்கள் ஆர்ப்பாட்டம் நடத்தி வருகிறார்களே?

! அமெரிக்க மக்கள் வியட்நாம் போரில் அவதிப்பட்ட அனுபவத்தை மறக்கவில்லை. தாய் நாட்டுப் பணியில் அல்லாது வேறு வித யுத்தத்தில் அமெரிக்க இளைஞர்கள் மடிவதை அவர்கள் விரும்பவில்லை. இன்றைய நிலவரப்படி சுமார் நாற்பது சதவித அமெரிக்க மக்கள்தான் வளைகுடாப் போரில் அமெரிக்கா இறங்கியதை எதிர்க்கின்றனர். ஆனால் யுத்தம் சீக்கிரம் முடிவடையாமல் நீண்டு கொண்டே போனால் இவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும். அப்போது புஷ் பாடு திண்டாட்டம்தான். மேலும், வளைகுடா பாலைவனப் பகுதியில், கோடைக்காலம் ஆரம்பித்து விட்டால் அமெரிக்க, ஐரோப்பியத் துருப்புக்களால் தாக்குப் பிடிக்க முடியாது. எனவே, பிப்ரவரி இறுதிக்குள் போரை முடிவுக்குக் கொண்டு வரவே புஷ் முயற்சி செய்ய வேண்டும். நமக்குத் தெரிந்த இந்த விஷயங்கள் புஷ்ஷுக்குத் தெரியாமலா இருக்கும்? பார்ப்போம் என்ன செய்கிறார் என்று.

○ ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.

? போர் நிலவரம் எப்படி இருக்கு?

! எல்லாம் பஸ்மாசுரன் கதைதான். வரம் தந்த சிவபெருமான் தலையிலேயே கை வைக்கப் பார்த்தான் அல்லவா? அப்படித்தான் அமெரிக்காவும், பிரிட்டனும், பிரான்ஸும், ஜெர்மனியும், ருஷ்யாவும் வியாபார நோக்கில் உசேனின் ராணுவத் திறனை வளர்த்தன. இப்போது அவை கட்டிக் கொடுத்த பாதாள பங்கர்களை அழிக்க அவற்றாலேயே முடியாமல் திணறுகின்றன. அவர்கள் தந்த ஆயுதங்களைக் கொண்டு அவர்களையே எதிர்க்கிறார் உசேன். வேடிக்கை என்னவென்றால் இதற்கு இத்தனை காலம் ஆகும் என்று நேச நாடுகளாலேயே கணிக்க முடியாமல் போனதுதான்! 'காரணம் என்னவாயினும் அதர்மத்துக்குத் துணை போவது ஆபத்து' என்பதைத்தான் பஸ்மாசுரன் கதை மட்டுமின்றி உசேனின் கதையும் நமக்கு உணர்த்துகிறது. இன்றைய இந்திய அரசியலிலும் இதற்குப் பல உதாரணங்கள் உண்டு என்பது யோசித்தால் புரியுமே!

○ ப. விஜயபாலன், திருவான்மியூர்.

? புஷ்ஷின் 'பாலைவனப் புயல்' நடவடிக்கை அவரை ஹீரோ ஆக்கி விடுமா?

! 'ரசாயனப் போர்க் கருவிகளையும் கிருமிகளைப் பரப்பும் போர்க் கருவிகளையும் பயன்படுத்துவேன்' என்ற சதாமின் மிரட்டலும், அதற்குப் போட்டியாக 'நியூட்ரான் குண்டுகளை அமெரிக்கா பயன்படுத்தும்' என்ற மிரட்டலும் நிஜமானால் ஹீரோக்கள் ஏது? எல்லாமே ஜீரோவாகி விடும், இரு தரப்பிலும்!

○ சிவ. சீனிவாசன், கும்பகோணம்.

? சதாம் உசேன்?

! வல்லரசுகளை எதிர்க்கத் துணிந்ததிலும், அவர்களை இத்தனை நாட்கள் தாக்குப் பிடிப்பதிலும், போர் சாணக்கியத்திலும் ஆச்சர்யமான மனிதர்! ஈராக்குடன் நடத்திய யுத்தத்தில் ரசாயன ஆயுதங்களைப் பயன்படுத்தித் துன்புறுத்தியதிலும், குவெய்த்தைக் கைப்பற்றிக் கொண்டு, 'விட மாட்டேன்' என்று கூறி, தேவையற்ற ஒரு பெரும் போரைத் துவக்கி வைத்ததிலும்; பல கொலைகளைச் செய்து பதவிக்கு வந்த முறையிலும் அருவருக்கத்தக்க மனிதர்.



• ஹீரோ ஆவாரா?



• ஆச்சர்யம்; அருவருப்

○ எஸ். நாரம்பு நாதன், கரண்டை.

? சமீபத்தில் அதிர்ச்சி அடைய வைத்து அதே நேரத்தில் சிந்திக்க வைத்த நிகழ்ச்சி எது?

! 'ஈராக்குக்குச் சொந்தமான சுமார் நூறு போர் விமானங்கள் அவற்றின் குழுவினருடன் ஈரானில் போய் இறங்கியுள்ளன' என்பதுதான். 'ஈரான் ஒருவேளை ஈராக்குக்குத் துணை போகிறதா என்ன!' என்று முதலில் அதிர்ச்சி! 'அப்படி இல்லை' என்று ஈரான் அரசே கூறும் போது சிந்தனை. அதன் விளைவு, குழப்பம். இந்த யுத்தத்தின் புரிந்து கொள்ளவே முடியாத புதிர் இதுதான். ஒருவேளை இந்த இதழ் உங்கள் கரத்துக்கு வருமுன் முடிச்சு அவிழ்க்கப்பட்டிருக்கலாம்!

○ மீ. தமிழ் ஷாஜஹான், கம்பம்.

? நீங்கள் சதாம் கட்சியா? புஷ் கட்சியா?

! அதர்மத்தின் முழு உருவமாக சதாம் காட்சி அளிப்பதால் நிச்சயம் நான் அவர் கட்சியல்ல. புஷ் கட்சியில் சுயநலம் கலந்திருப்பதால் அதிலும் சேராமல் ஒதுங்கவே எண்ணுகிறேன். இரண்டும் வேண்டாம். அமைதி வேண்டுவோர் கட்சியில் சேரலாம் என்று பார்த்தால், நம் நாட்டில் அவர்களும் 'யுத்தம் வேண்டாம்' என்று கூறுவதற்காகவே அமைதி இழந்து, ஒருவரோடு ஒருவர் 'போர்' தொடுத்துக் கொள்கின்றனர். போலீஸாருடனும் மோதுகின்றனர்! என்னத்தைச் சொல்ல!

○ கா. தனசேகரன், சென்னை.

? இராமர் கோயில், பாபர் மசூதி இரண்டும் இல்லாமல் இரு தரப்பினருக்கும் பொதுவாக ஒரு மருத்துவமனை கட்டினால் என்ன?

! அப்போதும் அங்கு வந்து சேர்கிறவர்கள் பாபர் மசூதிப் போராட்டத்தில் காயம் பட்டவர்களாகத்தான் இருப்பார்கள்!

○ ஜி. வெங்கி, குத்தாலம்.

? தமிழகச் சட்டப் பேரவையில் குளு குளு வசதி செய்துள்ளது பற்றி?

! உறுப்பினர்கள் பலரின் பேச்சும் நடத்தையும் சூடாகி வருவது இதனால் தணிந்து விடப் போவதில்லை.

○ கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

? அ. தி. மு. க. எம். எல். ஏக்கள் மீது சபாநாயகர் மேற்கொண்ட நடவடிக்கை சரிதானா?

! முதலில் எந்தக் கட்சியையும் சேராதவர்கள் (unattached) என்று கூறிய சில மணி நேரத்துக்குள் அவர்களை அ. தி. மு. க. நெ. 2 என்று பெயர் சூட்டியது ஆச்சரியமளித்தது. இதைத் தொடர்ந்து நடந்த அமளிகளும் சபாநாயகர் மீது வன்முறைப் பிரயோகமும் அருவருப்பை அளித்தன. அதற்குத் தண்டனையாக அவையின் இரண்டு கூட்டத் தொடர்களுக்கு அவர்களை ஒதுக்கி வைக்கும் ஆணை வருத்தத்தை அளித்தது. 'சட்டசபையைப் பகிஷ்கரிப்போம்' என்று 'ஜெ' அணியுடன் சேர்ந்து காங்கிரஸும் கூறியுள்ளது வேதனையை அதிகரிக்கிறது. எல்லாமாகச் சேர்ந்து நமது ஜனநாயகம் முதிர்ச்சி அடைவது எப்போது என்ற ஏக்கத்தை ஏற்படுத்துகின்றன.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

அ. நந்தகுமார்,
7, நாட்டாரம்மன் கோவில் தெரு,
ஏரல் — 628 801.

○ அ. நந்தகுமார், ஏரல்.*

? எரிபொருள் சிக்கன நடவடிக்கை எந்த அளவில் இருக்கிறது?

! சுக்லாவும் தேவிலாலும் ஸ்பெஷல் விமானங்களில் கொழும்புவுக்கும் நார்வேக்கும் பறந்து, எரிபொருள் சிக்கனத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் போது கவலை எதற்கு! துணைப் பிரதமரின் கௌரவத்தைக் காப்பாற்ற அதிகப்படி செலவு மூன்றே கோடி ரூபாய்தான்!

○ அ. முஸ்தபா, தக்கோலம்.

? ஒருவழிப் பாதையில் யாருக்குப் பயன்? (அரசியலில்தான் கேட்கிறேன்!)



* சில மணி நேரத்தில்...

! இ. காங்கிரஸில் ராஜீவின் ஆணை என்ற ஒருவழிப்பாதைதான் செயல்படுகிறது. முதல்வர் என்ற மரியாதையை விட்டுக் கொடுக்க பவார் தயாராயில்லாத போது ராஜீவின் ஆணை காரணமாக அவரை எதிர்த்துச் சில அமைச்சர்கள் போர்க் கொடி தூக்கினார்கள். ஆனால் முடிவில் என்ன நடந்தது? பவார் போனால் காங்கிரஸ் ஆட்சியே போய்விடும் என்பதை உணர்ந்த போது, ராஜீவ் ஒரு பல்டி அடித்து, 'பவாரே நீடிக்கட்டும்' என்று கூறி விட்டார். இப்போது போர்க்கொடி எழுப்பியவர்கள் அசடு வழிந்து கொண்டிருக்கிறார்கள். ஆக, அரசியலில் ஒரு வழிப்பாதை யாருக்கு ஆதாயம்? யாருக்கு நஷ்டம்? புரிகிறதல்லவா? இதே போல்தான் உத்தரப் பிரதேசத்திலும் முலாயம் சிங் யாதவ்வை எதிர்த்துப் போர்க் கொடி உயர்த்துமாறு என்.டி. திவாரி ராஜீவால் கேட்டுக் கொள்ளப்பட்டார். இப்போது திவாரியே யாதவ்வை ஆதரிக்க வேண்டும் என்று புது உத்தரவு பிறந்திருக்கிறது! திவாரியும் அவரது சகாக்களும் மென்று முழுங்கிக் கொண்டிருக்கிறார்கள்!

* சிக்கன உதாரணம்





* ஒருவழிப்பாதை

# தேசிய சேமிப்பு திட்டங்களில் முதலீடு செய்வோர்க்கு இலவச இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு மற்றும் வருமான வரி சலுகை



**இந்த புதுமையான திட்டம் 1.1.91 முதல் 31.3.91 வரை மட்டுமே**

முழுமையான பாதுகாப்பின் கீழ் உங்கள் பணம் வளரும்போதே

விபத்துக்கு எதிரான இன்ஷ்யூரன்ஸ் தொகையும் உங்களுக்கு கிடைக்கிறது.

சிறுசேமிப்புத்துறை, யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்துடன் இணைந்து, சிறுசேமிப்பில் முதலீடு செய்வோருக்கு தனிநபர் விபத்துக் காப்புறுதி திட்டத்தை இப்போது வழங்குகிறது.

1.1.91 முதல் 31.3.91 வரை சிறுசேமிப்பில் ரூ.1000/-ம் அதற்கு மேலும் முதலீடு செய்பவர்களுக்கு அவர்கள் முதலீடு செய்த தேதியிலிருந்து ஒரு வருட காலம் வரையில் இலவச தனிநபர் விபத்துக்களுக்கு எதிரான இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு கிடைக்கிறது.
கீழ்க்கண்ட சிறுசேமிப்புத் திட்டங்கள் தனிநபர் விபத்துக்களுக்கான இன்ஷ்யூரன்ஸ் சலுகையை உங்களுக்கு அளிக்கின்றன.

- கிசான் விகாஸ் பத்திரம்
- தேசிய சேமிப்புத் திட்டம்
- அஞ்சலக மாதாந்திர வருமானத்திட்டம்
- ஓய்வுபெறும் அரசுப் பணியாளர்களுக்கான டெபாசிட்திட்டம் 1989
- தேசிய சேமிப்புப் பத்திரம் 8வது வெளியீடு
- 15 வருட பொது சேமநலநிதி
- அஞ்சலக குறித்தகால டெபாசிட்

யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் நிறுவனம்

கீழ்க்கண்டவிதத்தில் விபத்துக்களுக்கான காப்புறுதி சலுகையை அளிக்கிறது

| மொத்த சேமிப்புத் தொகை | தனிநபர் விபத்துக்கான இன்ஷ்யூரன்ஸ் தொகை |
|---|---|
| ரூ.1000/- முதல் ரூ.10,000/- வரை | ரூ.20,000/- |
| ரூ.10,001/- முதல் ரூ.20,000/- வரை | ரூ.30,000/- |
| ரூ.20,000/-க்கு மேல் | ரூ.50,000/- |

## விபத்துக்களின் வகைகளும் நீங்கள் பெறும் சலுகைகளும்:

| | | |
|---|---|---|
| 1. | இறப்பு | 100% |
| 2. | இரண்டுகை/கால்கள், இரண்டு கண்கள் அல்லது ஒரு கை/காலும் ஒரு கண்ணும் இழப்பு | 100% |
| 3. | ஒருகால்/கை அல்லது ஒரு கண் | 50% |
| 4. | நிரந்தரமான முழுவதும் முடமான தன்மை | 100% |
| 5. | நிரந்தரமான அரைகுறையாக முடமான தன்மை - முடமான தன்மைக்கேற்ப சலுகை | |

சிறுசேமிப்புத் திட்டங்களில் முதலீடு செய்து இந்த அரிய வாய்ப்பினைப் பெற்றிடுங்கள்.

சிறுசேமிப்பில் முதலீடு செய்ய இவைகளே சிறப்புக் காரணங்கள்

சிறுசேமிப்புத் திட்டங்கள் பற்றிய இலவச புத்தகங்களுக்கு தொடர்பு கொள்ளுங்கள்:



**யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,**
பதிவு மற்றும் தலைமை அலுவலகம்,
24, ஒயிட்ஸ் சாலை, சென்னை-600 014.



விவரங்களுக்கு:

**சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை,
சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209
மற்றும் மாவட்டங்களில் அனைத்து வட்டாட்சியர்/வட்டார வளர்ச்சி அலுவலர்கள்

# பணியிலிருந்து ஓய்வுபெறுவோர்க்கும் ஓய்வு பெற்றோர்க்கும் தொடர்ந்து வருமானம் பெற அஞ்சலக மாத வருவாய்த்திட்டம்



| முதலீடு ரூ. | மாதந்தோறும் பெறும்தொகை ரூ. | 6-ம் ஆண்டு இறுதியில் போனஸ் ரூ. | மாதாந்திர வட்டிதவிர 6 ஆண்டிற்குப்பிறகு கிடைக்கும் தொகை ரூ. | வட்டிக்கு ஆண்டுக்கு கிடைக்கும் வருமான வரிவிலக்கு ரூ. |
|---|---|---|---|---|
| 5,000 | 50 | 500 | 5,500 | 600 |
| 10,000 | 100 | 1,000 | 11,000 | 1,200 |
| 15,000 | 150 | 1,500 | 16,500 | 1,800 |
| 20,000 | 200 | 2,000 | 22,000 | 2,400 |
| 25,000 | 250 | 2,500 | 27,500 | 3,000 |
| 50,000 | 500 | 5,000 | 55,000 | 6,000 |

**இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்:**

* வேறெந்த நிதிநிறுவனமும் மத்திய அரசின் இத்திட்டத்திற்கு இணையாக வழங்க இயலாது. 12% வட்டி மற்றும் 10% போனஸ்
* வட்டிக்கு வருமான வரிவிலக்கு (80எல் பிரிவின்படி)
* ஒருவர் தனியாக ரூ.2 லட்சம், கூட்டாக ரூ.4 லட்சம் வரை முதலீடு செய்யலாம்.
* அனைத்து அஞ்சலகங்களிலும் இத்திட்டம் செயல்படுகிறது.

**பிற மாவட்டங்களில் பரிசுக்கூப்பன்கள் கிடைக்குமிடங்கள்:**

அந்த மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள், அனைத்து வட்டாட்சியர் மற்றும் வட்டார வளர்ச்சி அலுவலகங்கள்.

**தமிழகத்தில் வாங்கும் பத்திரங்களுக்கு தமிழக அரசின் சிறப்பு சலுகைகள்:**

* ரூ.1000/-ம் அதற்கு மேலும் முதலீடு செய்வோர்க்கு 1% ஊக்கத்தொகை

**சேமிப்பு பரிசுத் திட்டம்:**

* ஒவ்வொரு ரூ.500/- முதலீட்டிற்கும் ஒரு இலவசப் பரிசுக்கூப்பன்
* மாருதிகார், பஜாஜ் ஸ்கூட்டர், கலர் டிவிகள், 165லி. குளிர்பதனப் பெட்டிகள், மோஃபாக்கள், தையல் மெஷின்கள், சைக்கிள்கள், குவார்ட்ஸ் கைக்கெடிகாரங்கள், சுவர்க்கடிகாரங்கள் போன்ற 262 பரிசுகள் பெறும் அரிய வாய்ப்பு.

**சென்னையில் பரிசுக்கூப்பன்கள் கிடைக்குமிடங்கள்:**

* சென்னை மாநகராட்சி மற்றும் மாவட்ட ஆட்சியர் அலுவலகம் (சிறுசேமிப்பு பிரிவு)
* சமூக பாதுகாப்பு துணை இயக்குநர் அலுவலகம், குறளகம், சென்னை.
* அனைத்து வட்டாட்சியர் மற்றும் சென்னை மாநகராட்சி வட்ட அலுவலகங்கள்



இயக்குநர்,
**சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொ.பே. 840223/846209

DIPR: /MS/91:Efficient

# தியானம்

ஜி.ராஜாராம்

ஏனோ எனக்கு மத்தியான நேரத் தூக்கமே வருவதில்லை. எவ்வளவுதான் வயிறு நிரம்பச் சாப்பிட்டாலும், எவ்வளவு தான் மாடாய் உழைத்தாலும் இந்த மத்தியானத் தூக்கம் மட்டும் எனக்கு எட்டாக் கனவு.

சக்ரபாணி, கிரி, அன்புமணி மூவரும் ஹாயாய்த் தூங்குகிறார்கள். இன்னும் ராமரத்னம் மட்டும் பாக்கி. அவன் எதற்கோ பாலிகா பஜார் வரை போயிருக்கிறான். இந்த நாலு பேரும் மதிய நேரக் கும்பகர்ணர்கள். லீவு நாட்களில் மதிய சாப்பாட்டிற்குப் பின் இதுதான் வேலை. இவர்கள் எப்படித்தான் மற்ற நாட்களில் ஆபீஸில் வேலை செய்கிறார்களோ புரியவில்லை.

இந்த அறையைப் பார்க்கையில் வியப்பாக இருந்தது. எப்படி நாங்கள் ஐந்து பேரும் ஒன்று சேர்ந்தோம். நானும், சக்ரபாணியும் கோயமுத்தூர். கிரி தஞ்சாவூர். அன்புமணி சேலம். ராமரத்னம் மெட்ராஸ். இங்கே ஐந்து பேரும் டெல்லிக்கு வந்து ஒரே அறையில்.

அறை முழுவதும் தமிழ்ப் பத்திரிகைகள். தமிழ்க் காஸெட்டுகள். தமிழ் நடிகைகளின் படங்கள். அறைக்கு வெளியேதான் டெல்லி. உள்ளே தமிழ்நாடு.

ராம ரத்னத்தின் கட்டில் மேல் ஓர் இன்லண்ட் லெட்டர். அந்த லெட்டரில் பெயரைப் படிக்கையில் ஆங்கில ராம ரத்னம். ரமாரத்னமாய்த் தோன்றியது. இவன் ரமா என்னும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால்... இவன் மனைவியின் பெயர் ஆங்கிலத்தில் ரமா ரமாரத்னமாய்த் தோன்றும்.' இல்லையேல் ராம ராமரத்னமாய்.

ப்ச். என்ன அசட்டுத் தனமான சிந்தனை. இந்த சிந்தனையைக் கட்டுப்படுத்தி தியானம் செய்ய வேண்டும். அதிக சிந்தனை, அதிக கவலை. ஆனால், தியானம் எப்போது செய்வது. நேரமே கிடைப்பதில்லையே!

தூங்கிக் கொண்டே பயணம் செய். சாப்பிட்டுக் கொண்டே டீ.வி. பார். நண்பரோடு பேசிக் கொண்டே ரோட்டில் நட. காலைக் கடன் கழித்துக் கொண்டே பத்திரிகை படி. கம்ப்யூட்டர் புரோக்ராம் எழுதிக் கொண்டே பக்கத்திலுள்ள பெண்ணை சைட் அடி. பாட்டுக் கேட்டுக் கொண்டே உடற்பயிற்சி செய்.

ஒரே சமயத்தில் இரண்டு காரியங்கள். எட்டு யோசனைகள். நேரமே இல்லை. அவசரம்! எதிலேயும் கான்ஸன்ட்ரேஷன் கிடையாது. வெறும் ஓட்டம். அர்த்தம் புரியாத ஓட்டம்! வேகம். வேகம். போகும். போகும் மேஜிக் ஜர்னி. போகும். போகும் தூரம். தூரம் மேஜிக் ஜர்னி. காலம் இல்லையே. நேரம் இல்லையே....

இந்த மேஜிக் ஜர்னியில் தியானம் பண்ண நேரமில்லையே. என்ன செய்வது!?

ஏன், இப்போது நேரமிருக்கிறதே. இப்போ செய்யேன் தியானம். யார் தடுக்கறாங்க.

இப்பவா, இப்படியா, இப்படி படுக்கையில் படுத்துக் கொண்டா. அதற்கென்று ஒரு முறை இல்லையா.... ஏன்.... இப்ப செய்தால்தான் என்ன...?

எங்கிருந்து ஆரம்பிப்பது? ஏதாவது ஒன்றில் மனத்தைக் குவிக்க வேண்டும். எதில்? எதிரே ஃபேன் கண்ணில் பட்டது....



ஃபேனிலா ...? ஃபேனில் மனத்தைக் குவிக்க முடியுமா? செய்துதான் பார்ப்போமே.

ஃபேனையே வெறிக்க ஆரம்பித்தேன். ஃபேனின் நடுப் பகுதியை முகமாகவும். இரண்டு இறக்கைகளைக் காதாகவும். ஒரு இறக்கையை உடலாகவும் கற்பனை செய்ய ஒரு பொம்மை உருவாயிற்று. இப்போது வேறு இறக்கையை உடலாகவும். மற்ற இரண்டைக் காதாகவும் கற்பனை செய்ய, பொம்மை நூற்று இருபது டிகிரி தள்ளிப் போயிற்று. மீண்டும் மற்றோர் இறக்கையை உடலாக்க, மறுபடி நூற்று இருபது டிகிரி தள்ளிப் போயிற்று. அந்த பொம்மை முயல் போலிருந்தது.

இது என்ன கற்பனை? அதெப்படி அந்த பொம்மை முயல் பொம்மை என்று தோன்றுகிறது? காது பெரிதாய் இருப்பதாலா?

இதே கற்பனையை எத்தனை ஃபேனில் செய்து விட்டேன்! வீட்டில் கூடத்து ஃபேன். வாசல் ரூம் ஃபேன். வேலூரில் அக்காள் வீட்டு ஃபேன், பாம்பேயில் மாமா வீட்டு ஃபேன், பெங்களூரில் காலேஜ் ஹாஸ்டல் ரூம் ஃபேன், குப்புசாமி நாயுடு ஹாஸ்டல் ஃபேன், வெங்கடேசா லாட்ஜ் ஃபேன், இதோ இப்போது இந்த ஃபேன். இன்னும் எத்தனை ஃபேன்களோ!

பார்க்கின்ற ஃபேனிலெல்லாம் இதே கற்பனை. அது ஓடாமல் நின்றிருந்தால் போதும். இந்த கற்பனை வந்துவிடும். ஏன் இப்படி? என்னை மாதிரியே வேறு யாருக்காவது தோன்றுமா? ஃபேன் இல்லாதிருப்போருக்கு இந்தக் கற்பனை வருமா. இல்லை சொன்னால்தான் புரியுமா? ஃபேன் இருப்போருக்கே புரியுமோ இல்லையோ.....

நடைபாதையில் இருப்போரிடம் ஃபேன் இருக்காதே. அவர்கள் வெயில் காலத்தில் என்ன செய்வார்கள். வெயில் காலத்தை விடு. குளிர்காலத்தில் ஒரு கம்பளி கூட இல்லாமல் எப்படி வாழ்கிறார்கள். அதுவும் இந்த டெல்லி குளிரில். இவர்களால் ஒரு ஸ்வெட்டர் வாங்க முடியுமா? டெல்லியில் ஒரு ஸ்வெட்டர் இருநூறு ரூபாய் ஆகிறது! எப்படி வாங்குவார்கள்!

ஒரு ஸ்வெட்டரில் அப்படி இருநூறு ரூபாய்க்கு என்னதான் இருக்கிறது. ஆட்டு ரோமமா? அதற்காக எத்தனை ஆடுகளைக் கொன்றார்களோ. ஆட்டை இதற்காகக் கொல்வார்களோ? ரோமத்தை மட்டும் வெட்டி எடுப்பார்களாய் இருக்கும். ரோமத்தை வெட்டி எடுத்தால் அதற்கு வலிக்காது என்கிறார்கள். ஆனாலும் பாவம். இந்த ஆடுகள்!

கோயமுத்தூரில் உக்கடத்தில் இந்த ஆடுகளை வெட்டி உரித்துக் கடைகளில் தொங்க விட்டிருப்பார்கள்! பக்கத்திலேயே ரீன்



கடை வேறு. நாற்றமாய் இருக்கும். இந்த மீனை எல்லாம் எங்கிருந்து தான் பிடிக்கிறார்களோ. பக்கத்திலிருக்கிற வாளாங்குளத்தில்தான் பிடித்திருப்பார்கள். வாளாங்குளம்தான் எவ்வளவு பெரிசு! ஆனால் இப்போதெல்லாம் பெரும்பாலும் அது வற்றித் தானே கிடக்கிறது.

இப்போது அந்த வாளாங்குளத்தின் ஒரு பக்கத்தில் சேரன் டிரான்ஸ்போர்ட் கட்டி விட்டார்கள். சேரன் பஸ்களை நினைத்தாலே இனிக்கிறது! கோயமுத்தூர் பஸ் சர்வீஸ் மாதிரி இந்தியாவிலேயே கிடையாது! சும்மா பள பளவென்று துடைத்து விட்ட கண்ணாடியாய் பஸ்கள் வளைய வருவதை அங்குதான் பார்க்க முடியும்.

அங்கிருக்கும் பஸ் கண்டக்டர்களும் ரொம்ப மரியாதையானவர்கள். பஸ் கண்டக்டர்கள் என்ன. அந்த ஊரிலுள்ள எல்லாருமே மரியாதையானவர்கள் தாம். வயதில் மிகவும் சிறியவர்களுக்குக் கூட 'வாங்க; போங்க' தான்.

சே! எவ்வளவு நல்ல ஊர் அது! என்ன அருமையான க்ளைமேட், எத்தனை அமைதியான நகரம், எவ்வளவு நல்ல மனிதர்கள்.....

அதையெல்லாம் விட்டுவிட்டு நான் இங்கே வந்து ஏன் அவதிப்படுகிறேன். இந்தக் குளிரில், இந்த அவசரத்தில், இந்த ஏமாற்றுக் கும்பலில் நான் ஏன் மாட்டிக் கொண்டு தவிக்கிறேன்.

வேலை கிடைத்த போதே அம்மாவும், அப்பாவும் போக வேண்டாம் என்றுதான் சொன்னார்கள். நான்தான் பிடிவாதமாய் வந்து சேர்ந்தேன். பாவம். அம்மாவும், அப்பாவும்! அவர்களுக்கு இன்னும் வருத்தமாய்த்தான் இருக்கும்.

அப்பாவும் அடுத்த வருஷம் ரிட்டயர் ஆகிவிடுவார். அப்புறம் என்ன செய்யப் போகிறார் என்று புரியவில்லை. இங்கே டெல்லியில் அவர்களை அழைத்துக் கொண்டு வைத்துக் கொள்வதும் சாத்தியமில்லை. நானும் வேலையை விட்டுவிட்டு அங்கே போய் இருக்க முடியாது. வயதான காலத்தில் தனியாக இருக்கிறார்கள். நான் ஒரு மகனுக்கு உரித்தான கடமையைச் செய்யவில்லை. அவர்களோடு இந்த சமயத்தில் இருப்பதை விட்டுவிட்டு இங்கே ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதித்து என்ன பிரயோஜனம்.

பாஷை சரியாகத் தெரியாத இடம். மோசமான க்ளைமேட். சக்கை பிழியப்படும் வேலை. உடம்புக்கும், நாக்குக்கும், மனசுக்கும் பிடிக்காத சாப்பாடு. பேர் மட்டும் பெரிதாய் 'ப்ராஜக்ட் எஞ்சினியர்' என்று...

அறையின் உள்ளே ராமரத்னம் நுழைவது தெரிந்தது.

"என்னடா ஒரு மாதிரி டல்லா இருக்கே? மத்தியானம் தூங்கிப் பழகுடா. அப்பத்தான் நைட்டு முழிக்க முடியும். கல்யாணமானதுக்கப்புறம் கஷ்டப்படப் போறே..." என்றான்.

நான் பேசாமல் இருந்தேன். என்ன பேசுவது. எரிச்சலாய் இருந்தது.

"என்னடா மச்சி, உண்மையிலேயே டல்லாத்தான் இருக்கே. என்னாச்சுடா?"

"ஒண்ணுமில்லடா. சும்மா யோசனை" என்றேன் சிரமப்பட்டு.

"யோசனை பண்ணாதடா. யோசனை பண்ணினாலே ப்ராப்ளம்தான். திங்க் பண்றதைக் குறைக்கணும்னா நான் சொல்றதைக் கேளு."

"என்ன?" என்றேன் சுரத்தின்றி.

**"டெய்லி ஓர் அரை மணி நேரம் தியானம் பண்ணு!" என்றான்.**

**அருள்மிகு சிவா-விஷ்ணு ஆலயம்**

பூங்கா நகர், காக்களூர்-602 003.
திருவள்ளூர் வட்டம், செங்கை அண்ணா மாவட்டம்.

**மகா கும்பாபிஷேகம்**

ஸ்வஸ்தி ஸ்ரீ பிரமோதூத வருஷம் பங்குனி மாதம் 11-ம்தேதி (25.3.1991) சோமவாரம் சுக்கிலபக்ஷம் தசமி திதி பூச நட்சத்திரம், அமிர்த்யோகம் கூடிய சுபதினத்தில் காலை உதயாதி 6 மணிக்குமேல் 7 மணிக்குள் மீன லக்கினத்தில் நூதன அருள்மிகு சிவா-விஷ்ணு ஆலயத்தின் மகா கும்பாபிஷேகம் இறைவன் அருள்புரிந்து ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் அனுக்கிரகத்துடன் நடத்த நிச்சயித்திருப்பதால் மெய்யன்பர்கள் கலந்து கொண்டு தங்களால் இயன்ற நிதி உதவி அளித்து மேற்படி விழாவைச் சிறப்பாக நடத்தி இறைவன் அருள் பெற கேட்டுக் கொள்கிறோம்.

நிதி உதவி அனுப்ப வேண்டிய முகவரி:

M.S. சிவானந்தம்
தலைவர்
அருள்மிகு சிவா-விஷ்ணு ஆலய மகா கும்பாபிஷேகக் குழு.
பூங்கா நகர், காக்களூர் — 602 003.
திருவள்ளூர் வட்டம்.

## வைரமுத்து

17

ஆச்சரியத்தின் உச்சத்தில் அமர்ந்தபடி ஓவியா கேட்டாள்:

''நிஜந்தானா நீங்கள் சொல்வது?

துருவங்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொள்ளலாம்.

பகலில் நட்சத்திரங்களைப் பார்த்து விடலாம்.

போர்க்களத்தில் தொலைந்துபோன பொத்தானைக் கூடக் கண்டுபிடித்து விடலாம்.

ஆனால் நிலவறைக்குள் தொலைந்துபோன என் தந்தையைச் சந்திப்பது சாத்தியமில்லையே திருஞானம்! சாத்தியமில்லையே!

ஆனாலும் பொய்களை நாடுகடத்திய உதடு உங்கள் உதடு.

சொல்லுங்கள்! எங்கே சந்தித்தீர்கள்? அவர் எப்படி இருந்தார்?''

அவள் தண்ணீரில் விழுந்த கிளிக்குஞ்சாய்த் தத்தளித்தாள்.

அவனோ உளிவிழுந்த பாறையாய் உணர்ச்சி இல்லாமல் இருந்தான்.

''சொல்லுங்கள்! எப்படி இருந்தார் என் தந்தை?''

அவள் சத்தம் அவன் சட்டை பிடித்தது.

அவனோ ஓர் உலோபியின் உண்டியலைப் போல் சிரமப்பட்டு வாய் திறந்தான்.

''இருந்தார்;

உன் தந்தை இருந்தார்;

அக்கினிக் கடலின் அலையாய் இருந்தார்;
உயிரை அவிக்கும் உலையாய் இருந்தார்;
விஷப்பால் கசியும் முலையாய் இருந்தார்.''

ஓவியாவின் கண்... ல் ஒருசந்தேக மின்னல் சடுகுடு விளையா.. டி அழிந்தது.

''புரியவில்லை திருஞ..னம்!''

''உன் தந்தை ஒரு தவமிருக்கிறார் ஓவியா.

ஆனால் அது வரம் வாங்கப் புரியும் தவம் அல்ல; ஒரு சாபம் கொடுக்கச் செய்யும் தவம்!''

''சாபமா?'' அவள் அவசரப்பட்டாள்.

''ஆமாம் ஓவியா! ஆளில்லாமல் சுற்றும் பூமி சாபமில்லையா? சுவாசிக்கப்படாத காற்று சாபமில்லையா? காலடிகள் இல்லாத கடற்கரை சாபமில்லையா?
பிள்ளை இறந்தபின் ஆடும் வெறுந்தொட்டில் மாதிரி, உயிர்க் குலங்களையெல்லாம் உள்ளுக்குள் புதைத்து விட்டு, இந்த பூமி உருண்டை சம்பவமே இல்லாமல் சுற்றிக் கொண்டிருக்குமே! அது சாபமில்லையா?''

''சாபம்தான்!
நீங்கள் சொல்வதெல்லாம் சாபம்தான்.

ஆனால் என் தந்தைக்கும் சாபத்துக்கும் என்ன சம்பந்தம்?''

''இல்லையா?
சாவுக்கும் விஷத்துக்கும் சம்பந்தம் இல்லையா?
சாம்பலுக்கும் நெருப்புக்கும் சம்பந்தம் இல்லையா?
உன் தந்தையின் முகத்தைத் தாடியும், அவர் இதயத்தைச் சஞ்சலமும் மூடியிருக்கின்றன ஓவியா!
விரக்தி அவருக்குள் விபரீத ஆசைகளை விதைத்து விட்டது.

இந்த பூமியை ஒரு கல்லறையாக்கி அதன் மீது 'தோற்றம் — மறைவு' என்று அவர் மட்டும் எழுத ஆசைப்படுகிறார்.

துண்ணுயிர்களின் மறுபக்கத்தை அவர் கண்டறிந்து விட்டார்.

தன் மீது எவனோ ஒருவன் எச்சில் துப்பியதற்காய் இந்த பூமியின் முகத்தில் அமிலம் தெளிக்க ஆசைப்பட்டு விட்டார்.

காற்றின் குரல்வளையை நெரித்து விட்டால் இந்த மனித பூமியே மயான பூமி என்கிறார்.''

''நம்ப மாட்டேன் திருஞானம்!
நம்ப மாட்டேன்.

மாங்கொழுந்தைப் போல் மென்மையானவர் தீக்கொழுந்தாய்த் திரிந்து விட மாட்டார்.''

# சிகரங்களை



திருஞானம் சோகம் கசியச் சிரித்தான்.

''காளான்கூட மெல்லியதுதான் ஓவியா;
அதில் பூசணம் பிடித்தால் அதுவே விஷம்!

இப்போது அவர் விஷமாகிவிட்ட
விஞ்ஞானக் காளான்!''

அவள் சராசரி மகளானாள்.

''இல்லை!

இது அநியாயப் பழி;

ஆதாரமில்லை.''

''அந்த முயல்களே ஆதாரம்.
ஓடி வந்த உதிரமே ஆதாரம்!
ஒழுகி முடிந்த உயிர்களே ஆதாரம்!''

''புரியவில்லை எனக்கு.''

''அந்த முயல்கள் உன் தந்தையின்
சோதனைச் சாலையிலிருந்து வீசி
எறியப்பட்டவை.
'என் விஷச் சோதனையின் வீரியம் பார்'
என்று என் முகத்திலடித்த சாட்சிகளே
அந்த முயல்கள்!

நாம் புதைத்து முடித்தது முயல்களை அல்ல
ஓவியா; உன் தந்தையின்
மனிதாபிமானத்தை!''

ஓவியா நிலை தாழ்ந்தாள்.

தவணை முறையில் அவள் தலையில்
இடிகள் இறங்கின.

நினைவு மேகங்கள் செதில் செதிலாய்
அவளைக் கடந்து போயின.

பாசத்தோடு அவள் முகம் தடவிய
தந்தையின் விரல்கள் இப்போது முட்களாக
மாறுவதை உணர்ந்தாள்.

தலைக்குமேலே பறந்து போன ஒரு பறவை
திகுரென்று தீப்பிடித்து வெடித்ததாய்த்
திகைத்தாள்.

மொட்டுக்குள் சண்டையிட்டுக் கொள்ளும்
வண்டுகள் மாதிரி, உதடுகளுக்குள்
வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டான்.

''அது சாத்தியமா திருஞானம்?

அது சாத்தியமா?

ஒரு சின்னஞ்சிறு நிலவறையில்
அத்தனை பெரிய ஆராய்ச்சி
சாத்தியமா?''

''ஆராய்ச்சியின் கருப்பை என்பது
இடமல்ல ஓவியா; தேடல்!

சிறையில் — எழுதுவதற்கு எதுவும்
தரப்படாத நிலையில் — வாசிக்கக்
கொடுக்கப்பட்ட புத்தகத்தின் வரிகளுக்கு
மத்தியில் ஈயத்துண்டுகளால்
எழுதவில்லையா வால்டேர்!

நான் விஞ்ஞானிக்காக விசனப்படவில்லை;
உனக்காகத்தான் இரக்கப்படுகிறேன்.

''இரக்கமா?

என் மீதா?

ஏன்?''

''ஒரு சமாதான ஜோதியோடு உலக

ரோக்கி

உருண்டையின் மீது நீ ஓடிக் கொண்டிருக்கிறாய்;

அதை அணைக்க உன் வீட்டுக்குள்ளிருந்தே புயல் ஒன்று புறப்பட்டு வருகிறதே!

உலகத்தின் கன்னங்களில் வழியும் கண்ணீரைத் துடைக்க உனது விரல் முளைத்திருக்கிறது;

ஆனால் நீ கண்ணீர் துடைக்கும் முன்பே அந்தக் கண்களைக் குத்தி ரத்தம் வரவழைக்க உனது வீட்டுக்குள்ளேயே இன்னொரு விரல் முளைத்திருக்கிறதே!

நீ இந்த மனித ஜாதியைப் பாசத்தோடு பார்க்கிறாய்;

உன் வீட்டுக்குள்ளேயே ஒரு ஜீவன் பாசக் கயிற்றோடு பார்க்கிறது!

சொல்!

உனக்காக நான் ரகசியமாய் அழுவதா? பகிரங்கமாய் அழுவதா?''

ஒவியா யோசித்தாள்;
முன்னும் பின்னும் தலையசைத்தாள்.

மேகத்தோடு கொஞ்ச தூரம் பயணம் போனாள்; பிறகு சட்டென்று தரை குதித்தாள்.

நதிவெள்ளம் குறைந்த பிறகு நாணல் நிமிருமே — அப்படி நிமிர்ந்தாள்.

பிறகு பிசிறடிக்காமல் பேசினாள்:

''திருநாளம்! அபாயத்தை மிகைப்படுத்தாதீர்கள்; வானம் கூடத் தீர்ந்து போகலாம்; நம்பிக்கை தீர்ந்து விடக் கூடாது.

எல்லாச் சிலந்தி வலைகளிலும் ஈக்கள் சிக்குவதில்லை.

அத்தனை பாம்புகளும் மனிதனைக் கொத்துவதில்லை.

இந்த பூமியைக் கொல்வதற்குப் போதுமான விஷம் எப்போதும் பூமியில் இருந்து வந்திருக்கிறது.

ஆனால் பூமி இன்னும் மரித்து விடவில்லை.

நம்புங்கள்! என் தந்தையைச் சல்லை செய்யலாம்.

விலங்கிலிருந்து மனிதனைப் பிரித்தெடுத்தது இயற்கை; நம்மால் ஒரு மனிதனிலிருந்து விலங்கையா பிரித்தெடுக்க முடியாது?

வெட்டி விட்ட பிறகும் வாழைகூட வளர்கிறதே!
வாழைக்கு இருக்கும் நம்பிக்கை வாழ்க்கைக்கு இல்லையா!

நம்பிக்கை நசியவில்லை நான்.''

●

ஒரு மாதிரியான கிராமமாக இருந்த மலையூத்து ஒரு — ''மாதிரி கிராம''மாக மலர்ந்தது.

- அங்கே ரேகைகளெல்லாம் கையெழுத்தாயின; அதுவரை தப்புத் தப்பாய் வாசித்துக் காட்டிய தபால்காரரின் சாம்ராஜ்யம் சரிந்தது.
- அரசியல், திரைப்பட விளம்பரங்கள் அழிக்கப்பட்டன; ஊர்ச் சுவர்களெல்லாம் நிர்வாண அழகில் நின்றன.
- தேர்தலுக்கு முதல் நாள் மட்டுமே அரசியல் பேசுவதாய் ஊர் மானம் காக்கத் தீர்மானம் போடப்பட்டது.
- அறுபது வயதைத் தொட்ட விவசாயக் கூலிகளுக்கு,சம்பளத்தோடு உள்ளூர்ப் பஞ்சாயத்து ஓய்வு கொடுத்தது.
- தெரு விளக்கு ஒருநாள் எரியவில்லையென்றாலும் அந்தத் தெருவுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டது.
- உழைப்பாளிகளுக்கு ஞாயிற்றுக்கிழமை ஒய்வளிக்கப்பட்டது.
- அந்த நாளில் — மண்ணுக்குள் புதைந்து கிடக்கும் கிராமியக் கலைகள் அகழ்ந்தெடுக்கப்பட்டு அழுக்குத் தேய்க்கப்பட்டன.
- ஊர்ச் சுகாதாரத்திற்கு வீட்டுக்கு ஒரு ரூபாய் வசூலித்து, பட்டதாரி இளைஞர்கள் சுத்தமாய் ஊரையே துடைத்து வைத்தார்கள்.
- காதலர்கள் இளைஞர் சங்கத்தில் பதிவு செய்து கொண்டால் — வேலை வாய்ப்போடு மாலை வாய்ப்பும் ஏற்பாடுத் திருமணம் செய்து

**அடுத்த இதழில்...**

**●● மெல்ல மெல்லச் செவிடாக்கும் இரைச்சல்கள்!**

**●● தனுஷ்கோடி பாலம்; இடித்தால் நல்ல லாபம்? — நேரடி ரிப்போர்ட்**



# தஞ்சாவூர் மாவட்டம், பட்டீஸ்வரம்.
# ஸ்ரீதேனுபுரீஸ்வரர் திருக்கோயில்
# துர்க்கா தேவிக்கு நவகோடி அர்ச்சனை





மாமன்னன் ராஜராஜன் உள்பட, சோழ மன்னர்கள் யாவருக்கும் காவல் தெய்வமாக விளங்கிய அன்னை துர்க்கா தேவி, பட்டீஸ்வரம் ஸ்ரீ தேனுபுரீஸ்வரர் ஆலயத்தின் வடபகுதியில் எழுந்தருளி அருள் பாலித்து வருகிறாள். இத்திருத்தலத்தில்தான், ஞானசம்பந்தருக்கு இறைவன் முத்துப்பந்தல் அளித்து, அக்காட்சியைக் காண நந்தியை விலகச் செய்தது. விஸ்வாமித்ரர் பிரம்ம ரிஷி பட்டம் பெற்றதும், ராமபிரானுக்கு வாலியைக் கொன்ற சாயாஹத்தி தோஷம் நீங்கப்பட்ட தலமும் இதுவே. காமதேனுவின் புத்ரி பட்டி ஈஸ்வரனை வழிபட்டதும் இத்தலத்தில்தான். இச்சிறப்பு மிக்க தலத்தில்தான் அஷ்டபுஜ துர்க்காதேவி, இந்தக் கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக, வேண்டுவோர்க்கு வேண்டும் வரங்களை அளித்து அருள் பாலித்து வருகிறாள்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த அன்னைக்கு நவகோடி அர்ச்சனை (ஒன்பது கோடி துர்க்கா நாமாவளி) விமரிசையாக நடைபெற்று வருகின்றது. மூன்று கோடி அர்ச்சனைகள் முடிவு பெற்று நான்காவது கோடி துவக்கமாயுள்ளது. பங்கு பெற விரும்புபவர்கள், ஒவ்வொரு ஸகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. 25/-ம், ஒவ்வொரு நவசக்தி அர்ச்சனைக்கு ரூ. 225/-ம், ஒவ்வொரு ஏகதின லட்சார்ச்சனைக்கு ரூ. 2500/-ம் என்று, செயலர் மற்றும் பொருளாளர், ஸ்ரீ துர்க்காம்பிகை நவகோடி அர்ச்சனை கமிட்டி, பட்டீஸ்வரம் 612703 என்ற முகவரிக்கு, ரொக்கமாக / மணியார்டர் மூலம் / செக்-பாங்க் ஆர்டராக, அனுப்பி, நவகோடி அர்ச்சனையில் அவரவர்கள் சக்திக்கேற்ப பங்குகொண்டு, வாழ்வில் சகல நலன்களையும் அடைய வேண்டுகிறோம்.

தனி நபர் ஒருவர், ஒரே தினத்தில், ஒரு ஆலயத்தில் உள்ள தெய்வத்திற்கு, ஏகதின லட்சார்ச்சனை செய்திட ஒரு அரும் பெரும் வாய்ப்பு!

G.K. மூப்பனார் M.L.A.,
புரவலர்

V.R. கோபாலன்
வழக்கறிஞர்
தலைவர்

S. கல்யாண சுந்தரம்
(குடந்தை ஒன்றியம் தலைவர்)
உப தலைவர்

L. மாரியப்பன்
(நிர்வாக அதிகாரி)
செயலர் / பொருளாளர்

R. வெங்கடேசன்
(தலைவர், அறங்காவலர் குழு)
மற்றும்
அறங்காவலர்கள்

ஸ்ரீ துர்க்காம்பிகை நவ கோடி அர்ச்சனைக் குழு, பட்டீஸ்வரம்.



வைக்கப்பட்டது.

- யாராவது இறந்து போனால் அது ஊர்ப் பொதுப் பிணம்; அடக்கச் செலவை ஊர் ஏற்றது.
- மது அருந்துபவன் வீட்டுக்குத் தண்ணீர் விநியோகம் ரத்து!
- தம் மக்களைப் பட்டப் படிப்புப் படிக்க வைத்த பெற்றோர் கூலி வேலை செய்தால் இரண்டு மடங்காகச் சம்பளம் ஏற்றப்பட்டது.
- காவல் துறையின் பொறுப்பு — ஊரை விலங்குகளிடம் இருந்து மட்டும் பாதுகாப்பது.

●

தண்ணீரில் குளித்துவிட்டுச் சிலிர்த்துக் கொள்ளும் பறவையாய் அந்த ஊரே புத்துணர்ச்சியோடு பூத்து நின்றது.

ஒவியாவை அந்த ஊர், குலதெய்வம் என்று கும்பிட்டது.

இதயங்களைக் கழுக்கெடுத்து. எண்ணங்களைச் சிக்கெடுத்து மூடநம்பிக்கைகளின் முடிச்சவிழ்த்தான்.

"இரவில் மரத்தடியில் உறங்காதீர் மனிதர்களே! அப்போது மரம் கரியமில வாயுவை வெளியிடும். ஆக்ஸிஜன் குறைவதால் மூச்சு முட்டும். உடனே முனியடித்ததுஎன்றுமூட முடிவுகட்டி முடங்கிவிடாதீர்!"

கல்லில் அடிக்க அடிக்கப் பிரியும் அழுக்கு மாதிரி, அவன் சொல்லால் அடிக்க அடிக்க வடிந்தது இருட்டு.

●

"ஒவியா!
இந்த பூமிக்குப் புதுச்சூரியன் கொண்டு வந்தவனே!
உன்னை வணங்கிக் கொண்டே இருக்க எனக்கொரு வரம் கொடுப்பாயா?"

அவன் பூஜைக்கு அவன் புன்னகை வரம் கொடுத்தான்.

அவன் மனசின் உயரம் நோக்கி அவன் வளர்ந்து கொண்டேயிருந்தான்.

அதே அதிகாலையில் அந்த ஊரின் நுழைவாயிலில் உயர்ந்து கொழுத்து வெளிநாட்டுக் காரில் வந்திறங்கிய இரண்டு வெள்ளைக்காரர்கள் — 'விஞ்ஞானியின் வீடு எது?' என்று விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.

உச்சி மலையில் இருந்த அருவி ஒவென்று அழுது கொண்டே விழுந்து கொண்டிருந்தது.

— இன்னும் சொல்வேன்

# சிக்கனத்துக்குச் சில யோசனைகள்!



**சுப்பிரமணியன்: பெட்ரோல் சிக்கனம்!**

ஸ்கூட்டர், மொபெட், மோட்டார் சைக்கிள் போன்ற இரண்டு சக்கர வாகனங்களில் ஓர் இடத்துக்குச் செல்கிறோம். அங்கிருந்து திரும்பப் புறப்படும் போது, வண்டியை ஸ்டார்ட் செய்து விட்டு 'U' டர்ன் அடித்துத் திரும்புவதற்குப் பதிலாக உருட்டித் தள்ளித் திருப்பிவிட்டு 'ஸ்டார்ட்' செய்ய வேண்டும். சிறு துளி பெரு வெள்ளம். அதிக வேகம் பெட்ரோல் குடிக்கும். நிதானை. சீரான ஓட்டம் மிச்சப்படுத்தும். சிறு தூரப் பயணங்களுக்கு நடந்தே பழகலாம். உடம்புக்கும் நல்லது.



**ஹன்ஸா காந்தி: செலவில்லாத வெந்நீர்!**

மதிய நேரத்தில் துணி துவைத்தால் (கோடை காலத்தில்) குழாய்த் தண்ணீர் வெது வெதுப்பாய், ஏன், சூடாகக் கூட இருக்கும். துணியில் அழுக்கு சீக்கிரம் விடும். அலசிய நீரைச் சாக்கடையில் கொட்டாமல் பாத்ரூம் கழுவ உபயோகிக்கலாம்.



**தங்கம்: ஆரோக்கிய சிக்கனம்!**

சமையலில் எண்ணெய் குறைப்பது உடலுக்கு ஆரோக்கியம். சிக்கனத்துக்கும் உதவும். பொரித்த, வதக்கிய பண்டங்களை விட வேக வைத்த காய்கறியே நல்லது. நான் தினந்தோறும் ஏதேனும் ஒரு பச்சைக் காயைச் சாப்பாட்டில் சேர்த்து விடுவேன்.

எண்ணெய் மட்டுமல்ல, நேரமும் எரி பொருளும் கூட மிச்சமாகும். உடம்புக்கும் நல்லது. நெருப்புக்குச்சி கிழித்த பிறகு காஸ் திறப்பது, டிராஃபிக்கில் மோட்டார் சைக்கிள், கார் ஆஃப் செய்வது ஆகியவை இன்று சிக்கனம் மட்டுமல்ல; தேச பக்தி!



**மைதிலி: பதினெட்டு எட்டாகும்!**

ஒரே குடியிருப்பில் வாழும் ஃப்ளாட் வாசிகளான நாங்கள், பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை கொத்தவால் சாவடிக்குச் சென்று மொத்த விலைக்குக் கறிகாய் வாங்கி வந்து, பிரித்து எடுத்துக் கொள்வோம். இதற்கு ஆகும் போக்குவரத்துச் செலவையும் பங்கு போட்டுக் கொள்வோம். ஒரு வருடமாக இந்த முறையில் காய் வாங்கி, பாதிக்குப் பாதி செலவைக் குறைத்துள்ளோம்.

ஜூஸ் தயாரிப்பிலும் இதே முறையைக் கையாள்கிறோம். மொத்த விலைக்குப் பழங்களை வாங்கி, வீட்டிலேயே பிழிந்து சர்க்கரை, இதர பொருள்களின் செலவையும் பகிர்ந்து கொண்டால், கடையில் பதினெட்டு ரூபாய்க்கு விற்கும் ஒரு பாட்டில் ஜூஸை எட்டு ரூபாய் செலவில் தயாரிக்க முடிகிறது!

போட்டோக்கள்: பிரபுசங்கர்.

வாசகர் யோசனை:
சா. கிருஷ்ணசாமி,
இராசேந்திரப்பட்டினம்.



# ஊரு, அருகில் ஊரு



அண்மையில் வெளியான ஒரு படத்தைப் போலவே இதிலும் இரண்டு நாயகிகள். இடைவேளைக்கு முன் வைஷ்ணவி. இ.பி. நாயகி — ரம்யா.

இ.மு. நாயகிக்குச் சற்று வேலை அதிகம். வேலைக்குப் போகிறார். காதலிக்கிறார். கல்யாணம் செய்து கொள்கிறார். கொடுமைகளுக்கு உள்ளாகிக் கண்ணீர் விட்டுக் கதறுகிறார். முடிவில் கொலையுண்டு இறந்து போகிறார். (மு. காட்சிகளும் இதில் அடக்கம்.)

வைஷ்ணவி — படு பொருத்தம்.

இ.பி. நாயகி சதி சாவித்திரி பாணியில் கணவன் உயிருக்காக மன்றாடுவதோடு சரி. (சமீபகால கிளைமாக்ஸ் ஃபார்முலாவான அம்மன் கோயில் தீமிதி — மஞ்சள் புடைவை — அங்கப் பிரதட்சணம் — வேப்பிலைக் கொத்து நடனம். இத்தியாதி....)

தயாரிப்பாளர்கள் துணிச்சல்காரர்கள். நிறைய அறிமுகங்கள். இவர்களில் ப்ளஸ் மார்க் வாங்குகிறவர் சாணக்யா (இசை). அங்கங்கே திகிலூட்டும் பொருத்தமான பின்னணி இசை.

ஒளிப்பதிவு களில் — கவியரசு. சில உத்திகளும் கோணங்களும் த்ரில்லிங். குறிப்பாக, பொம்மைக்குள் புகுந்துள்ள ஆவி கொலைகாரர்களைப் பயமுறுத்தும் நிகழ்ச்சிகள்.

பொம்மை சம்பந்தப்பட்ட காட்சிகளில் அசலையும் நகலையும் மாறி மாறி இடம் பெறச் செய்து, கத்தரிக்கோலைப் பயன்படுத்தியிருக்கும் விதம் கச்சிதம்.

சில இடங்களில் பொம்மை உருவில் உள்ள அந்தக் குழந்தை பளிச். திருஷ்டி சுற்றிப் போட வேண்டும். குறுக்கத்தியை வைத்துக் கொண்டு என்னமாய் சண்டை போடுகிறது! படுசுறுசுறுப்பு.

ராதாரவி, எஸ்.எஸ். சந்திரன் அட்டகாசம்.

முக்கால்வாசிக் கதைகள் நடைபெறும் ஊர்களில் போலீஸ்காரர்களே இருப்பதில்லை! போலீஸை நாடுவதில்லை; ஊர்ப் பஞ்சாயத்திலேயே எதையும் முடிவு செய்து விடுவதுதான் பரம்பரைப் பழக்கம் என்கிற வழக்கமான சால்ஜாப்பு இதிலும் உண்டு!

கொலையுண்ட இ.மு. நாயகியின் ஆவி ஒரு பொம்மையினுள் புகுந்து கொண்டு தன் மரணத்துக்குக் காரணமான அந்த நாலு பேரைப் பழிவாங்குவதுதான் கதை.

இ.பி. காட்சிகளில் நல்ல சுறுசுறுப்பு — அதுவரை இ.மு. வில் பொறுமையைக் கடைப்பிடித்தால்.

— சி. ஆர். கே.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka



"என் கண்மணியின்
மிருதுவான
சருமத்திற்கு
நான் ஜான்ஸன்ஸ்
பேபி சோப் ஒன்றையே
நம்புகிறேன்."




வேறு எந்த சோப்பிலும்
ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் கிடையாது

குழந்தைப் பராமரிப்பில் தலைமுறை தலைமுறையான நிறுவனம்.

ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்

Ogilvy&Mather 7764 TM